Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 328

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503

வருஷச் சந்தா ரூ. 10. ஜீவியச் சந்தா ரூ. 100

---

பேரருளாள பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்.



ஆழ்வார்எம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1975ஸு அக்டோபர், ஐப்பசிமீ

## ஸ்ரீமான் உ. வே. K. R. ராஜகோபாலாசார்ய தம்பதிகள்



(புதுடில்லியில் வாழ்பவர்)

சென்ற 327 ஸ்ரீராமாநுஜனிதழில் 27ஆம் பக்கத்தில் "தலைநகரில் ஸ்ரீவைஷ்ணவமஹநீயரின் ஷஷ்ட்யப்தபூர்த்தி" என்ற மகுடத்தின் கீழ்த் தெரிவித்த சுப கல்யாணத்தைச் சேர்ந்த திருவுருவப்படம் இது. அப்போதே வெளியிட்டிருக்க வேண்டும்; அவகாசங் குறைவினால் பிரசுரிக்க இயலாமல் நின்றுவிட்டது. தம்பதிகளுக்குப் பல்லாண்டுபாடி மகிழ்கிறோம்.

—பத்ராதிபர்.

---

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ ராமானுஜ ஸுப்ரபாத கோஷ்டி

## ஸ்ரீ வைஷ்ணவ பவனம்

**33, ஆறுமுகன் தெரு, :: மதராஸ்-600001.**

**(சுலோகம்)** ஸித்திர் பவதி வா நேதி, ஸம்சயோச்யுத ஸேவினாம் ।
ந ஸம்சயோஸ்தி தத்பக்த பரிசர்யா ரதாத்மநாம் ॥

ஸ்ரீராமானுஜ தாஸர்களுக்கு விண்ணப்பம்!

ஸ்ரீயப்பதியின் கிருபாகடாக்ஷத்தினால் ஸ்வாமி நியமனத்தினால் எங்கள் கோஷ்டியார் மதராஸ் வரதாமுத்தியப்பன் தெரு ஸ்ரீ வரதராஜப்பெருமாள் மணவாள மஹாமுனி சன்னிதியில் ஸ்ரீராமானுஜ ஸ்வாமிக்கு கற்பகிரஹத்திற்கு மேல் விமானம் கட்டுவதற்கு ஆரம்பித்துள்ளோம்; இதற்குமேல் முடிந்தால் கற்பகிரஹத்திற்குள் பக்கங்களில் கண்ணாடிகளும் வெளிப்புறத்தில் ஆயில் பெயிண்டும் இதற்குக் கீழே குறிப்பிட்டுள்ள திவ்ய தேச மூலவர்கள் போல பிம்பங்களும் விமானம் மேலே எழுந்தருளப்பண்ணவேணும். ஸ்வாமி கர்பகிரஹம் முன் பாகத்தில் இரண்டு பக்கத்திலும் கூரத்தாழ்வான், முதலியாண்டான் முதலியோர்களை கூட எழுந்தருளப்பண்ணவேணும் என்ற அபிப்ராயம் உள்ளது. இது ஜகதாசார்ய கைங்கர்யம் ஆகையால் இது கிடைப்பது அரிது. பக்தர்கள் உதவிபுரிந்து பூர்த்தி செய்யவேணும் கைங்கர்ய விபரங்களை வேறு பிரசுரங்களில் காண்க.

இப்படிக்கு, ஸ்ரீ ராமாநுஜ ஸுப்ரபாத கோஷ்டியார், சென்னை G T.

# ஸ்ரீ ராமாநுஜன்—328



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 28 | ராக்ஷஸஸ்ஸூ ஐப்பசிமீ 10—10—75 | ஸஞ்சிகை 4


## ஐப்பசித் திங்களும்-ஐவர் பெருமையும்

மாதங்களுள் ஐப்பசி மாதத்திற்கு நிகரான மாதம் ஐப்பசி மாதமேயாகும். இம்மாதம் வடமொழியில் துலாமாஸ மெனப்படும். துலா என்னும் வடசொல்லுக்கு ஒப்பு என்றும் திராசு எனறும் இரு பொருள்களுண்டு. ஒப்பு என்னும் பொருளில் ஒப்புத் தேடவேண்டிய மாதம்-ஒப்பற்ற மாதம்—என்பது கருத்தாகும். திராசு என்னும் பொருளில் "உலகுமழிசையு முள்ளுணர்ந்து தம்மில் புலவர் புகழ்க்கோலால் தூக்க" என்கிற திருச்சந்த விருத்தத்தனியன் படியே திராசிலிட்டு நிறுக்கவேண்டிய மாதம் என்பது கருத்தாகும் இரண்டு படியாலும் ஒப்பற்ற மாத மென்பதே தேறும். ஆழ்வார்களில் முதலாழவார்களென்று போற்றப்படுகிற பொய்கையார் பூதத்தார் பேயார் என்னும ஆழ்வார்கள் மூவரும், ஆசாரியர்களில் நிகரற்றவர்களென்று புகழ்பெற்ற பிள்ளைலோகாசாரியரும் மணவாள மாமுனிகளும் ஆக ஐவர் திருவவதரித்த மாதமன்றோ ஐப்பசிமாதம். இவ்வைவரையும் அடைவே சிறிது அநுபவிக்க ஆசைகிளர்கின்றது. இவர்களின் திவ்ய ஸ்ரீ ஸூக்திகளில் ஏகதேசம் அநுபவிப்பதே இவர்களது பெருமையநுபவமாகும்

### 1. பொய்கையார் பெருமைச் சுருக்கம்

முதல் திருவந்தாதியென வழங்கப்பெறும் நூறு பாசுரமுள்ளதொரு திவ்வியப்பிரபந்தம் இவர் தம்முடைய முதன்மையான அருளிச்செயலாகும் இதில் ஒரு பாசுரத்தை ஸாரமாக வெடுத்து அநுபவிப்போம் நான்காவது பாசுரத்தில் 'நெறிவாசல் தானேயாய் நின்றனை' என்பது முதலடி. இப்பாசுரத்தில் ஒரு புராதன கதையை யருளிச் செய்கிறார். அதை அடுத்தபடியாக எடுத்துக் கொள்வோம். 'தேவோ நாமஸஹஸ்ரவாந்' என்றபடி பேராயிரமுடைய பெருமானுக்கு

ஆழ்வார் சாத்துகிற விலக்ஷணமான திருநாமம் நெறிவாசல் தானேயாய் நின்றான் என்பது. நெறி யென்று மார்க்கத்தைச் சொல்லிற்று; உபாயம் என்றபடி. ஸாதனமென்பதும் உபாய மென்பதும் பர்யாயம். வாசல் என்றது புகுமிட மென்றபடியாய் உபேயத்தைச் சொல்லிற்றாகும் உபேய மென்பதும் ப்ராப்ய மென்பதும் ஸாத்ய மென்பதும் பர்யாயம். உலகில் ஒவ்வொருவர் ஒவ்வொன்றை உபேயமாகக் கொள்வர் [பேறாகக் கொள்வர்]; அதைப் பெறுதற்கு உபாயம் வேண்டியே யிருக்கும். உபாயமில்லாமல் உபேயம் கிடைக்காது. ஆகவே உபாயம் வேறாய் உபேயம் வேறாயிருப்பது பொதுவான போக்கு. எம்பெருமான் விஷயத்தில் மட்டும் இது விலக்ஷணமாயிருக்கும். அவனைப் பெறுதற்கு அவனே உபாயம். 'உபாயோபேயத்வே ததிஹ தவ தத்வம் ந து குணௌ' என்ற பட்டருடைய ஸ்ரீ ஸூக்தி அற்புதமாய் அமைந்தது; எம்பெருமானுக்கு உபாயத்வமும் உபேயத்வமும் குணங்களல்ல; ஸ்வரூபம்; (அதாவது) அஸாதாரண லக்ஷணம் என்றபடி. எம்பெருமானுக்கு என்ன லக்ஷணம்? என்று ஒருவர் கேட்டால், தானே உபாயமாயும் தானே உபேயமாயுமிருக்கை லக்ஷணம் என்று சொல்லிவிடலாம். இப்படிப்பட்ட வஸ்து வேறொன்று இருப்பதாகக் காட்டமுடியாது. இவ்வதிசயத்தைப் பொய்கையாழ்வார் நெறிவாசல் தானேயாய் நின்றான் என்று ஒரு திருநாமமாக்கிக்காட்டினார்.

இப்பாட்டில் கூறிய பழைய இதிஹாஸமாவது "ஆலமர நீழல் அறம் நால்வர்க்கு அன்றுரைத்த ஆலமமர் கண்டத்தரன்"—விஷகண்டனென்று பேர்பெற்ற பரமசிவன் ஆலமரத்தின் நிழலிலே யிருந்துகொண்டு அகஸ்த்யர் புலஸ்த்யர் தக்ஷர் மார்க்கண்டேயர் என்கிற நால்வர்க்குத் தர்மோபதேசம் செய்தனனும் இக்கதையைத் திருமழிசைப் பிரானும் தம்முடைய திருவந்தாதியில் "ஆல நிழற்கீழ் அறநெறியை நால்வர்க்கு, மேலையுகத் துரைத்தான் மெய்த்தவத்தோன்" என்ற பாசுரத்தினால் அருளிச் செய்துள்ளார். அது நிற்க; இக்கதையை இங்குப் பொய்கையாழ்வார்ஸாதிப்பது வெகுவிலக்ஷணம். முன்னம் தானறிந்தன்றோ பிறர்க்கு உபதேசிக்க வேணும். பகவத் விஷயம் இவனுடைய அறிவுக்கு எட்டுமதன்றோ என்பார்போன்று ,அரன் அறிவானும்' என்று ஏசுபு முறையில் பேசுகிறார். அன்றியும்' தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமொத்த பகவத் விஷயத்தை அமுருதகண்டன் அன்றோ பேசவேணும்; [ஆலமமர்கண்டத்தரன்] ஹாலாஹல மென்னும் விஷத்தைக் கழுத்திலே கொண்டுள்ள இவனா பேசுவது? என்று இதுவும் ஒரு ஏச்சு.

## 2. பூதத்தார் பெருமைச் சுருக்கம்

இவ்வாழ்வார் தமது திருவந்தாதியில் (16) "வனத்திடரை ஏரியாம் வண்ணமியற்றுமிது வல்லால், மாரியார் பெய்கிற்பார் மற்று" என்று விலக்ஷணமானதொரு த்ருஷ்டாந்தம் காட்டியருளினர். மேடான நிலத்தை வெட்டிப் பள்ளமாக்கி விடலாமேயல்லது மழைநீரையுண்டாக்க யாரால் முடியும்? என்பது இதன் கருத்து. ஒரு தெருவில் இரண்டு வீடுகள்; ஒரு வீட்டுவாசலில் பள்ளமிருந்தது. அதில் மழைத்தண்ணீர் தேங்கி வீட்டுக்காரனுக்கு மிகவும் ஸௌகரியமளித்து வந்தது. மற்றொரு வீட்டு வாசலில் பள்ளமின்றிக்கே மேடு இருந்தபடியால் அங்குத் தண்ணீர் தேங்கு

வதற்கு அவகாசமில்லாமலிருந்தது. பள்ளம் வெட்டிவிட்டால் நாமும் பக்கத்து வீட்டுக்காரன் போல் ஸௌகரியமடையலாமென்றெண்ணி மேட்டை வெட்டிப் பள்ளமாக்கினன். ஆனால் மழை பொய்யாமையினால் தண்ணீர் வரவில்லை. இதனை நெஞ்சில் ஊன்றி நோக்குவோமாயின் இதிலிருந்து ஒரு சாஸ்த்ரார்த்தம் கிடைக்கும். (அதாவது)—பள்ளம் வெட்டுதல் மழை பெய்வதற்கு ஸாதனமன்று; 'நான் பள்ளம் வெட்டி விட்டேன். மழையே! நீ பெய்தாகவேணும்' என்று மேகத்தை அடிப்பிட முடியாதன்றே. நாம் பள்ளம் வெட்டுவது மழைக்கு ஸாதனமன்றாகில், வீணை இச்செயலை எதற்காகச் செய்வது' என்று நினைக்கலாகாது; பள்ளம் வெட்டி வைத்தால் காலவிசேஷத்தில் தானாகப் பெய்கிற மழையை இது தாங்கிக் கொள்ள ஹேதுவாகும்.

இதுபோல, நாம் சேதனராகப் பிறந்துள்ள வாசிக்காக நம்முடைய நிலைமையைச் சீர்படுத்திக் கொள்வோம். இது பகவத் க்ருபைக்கு ஸாதனமாகமாட்டாது. ஒருகால் பகவான் நம் மீது அருள் வெள்ளத்தைப் பெருக்கத் திருவுள்ளம் பற்ற நேர்ந்தால் அந்த விஷயீகாரம் நம்மிடத்தில் நன்கு தங்குவதற்குப் பாங்காகுமத்தனை—என்பதாம். திருத்தமுறுத சேதனரை மேட்டு நிலத்தின் ஸ்தானத்திலே கொள்க. அத்வேஷாதிகளாலே தம் நெஞ்சைத் திருத்திக் கொள்வதை ஏரியாம் வண்ணமியற்றுவதாகக் கொள்க. நிர்ஹேதுக பகவத் ப்ராப்தி கைபுகுதலை மாரி பெய்கையாகக் கொள்க. ... ... ... ... *

## 3. பேயாழ்வார் பெருமைச் சுருக்கம்

இவ்வாழ்வாருடைய திருவந்தாதியில் (17.) *சென்ற நாள் செல்லாத செங்கண்மாலெங்கண்மால், என்ற நாள் எந்நாளும் நாளாகும்* என்றுள்ளபாசுரம் நிச்சலும் சிந்திக்கத்தக்கது. மேலெடுத்த பாசுரத்தின் பரமதாற்பரிய மென்னவென்றால், ஒருவனுக்கு நிகழ்காலமொன்று நல்லதாகச் செல்லுமானால் அவன் இறந்த காலத்தைப்பற்றியும் எதிர் காலத்தைப்பற்றியும் கவலை கொள்ளவேண்டா என்பதே. சென்ற நாள் — செல்லாத நாள்—செங்கண்மாலெங்கள்மால் என்ற (நிகழும்) நாள்—ஆக முக்கால நாட்களும் நல்ல நாட்களே என்பதாகப் பாசுரத்தின் பொருள். செங்கண்மால் எங்கள்மால் என்ற நாளாவது—எம்பெருமானை அநுபவிக்கும் நாள். அந்த நாளொன்று நன்கு வாய்க்குமானால் சென்ற நாள் நன்னாளாய்-பகவதநுபவமில்லாமல் பழுதேகழிந்த நாளும் நன்னாளேயாமென்கை. எப்படியென்னில்; அந்த நாள் கழிந்து போனதனாலேயே, இன்று வயிறார வுண்டவன் கீழே பட்டினிகிடந்து பசியால் வருந்தின நாளை நினைத்து வருந்த வேண்டாவே. அதேபோல, மேல் வரப்போகும் நாளை நினைத்தும் வருந்த வேண்டா. இன்று செல்வம் படைத்தவன் நாளைக்கு நாம் செல்வமிழந்து தரித்ரனாய் விடுவோமோ வென்று நினைத்திடாமல் எப்போதும் இப்படியே யிருப்போமென்று நினைத்து மகிழ்ந்திருப்பதுபோல, இன்று பகவதநுபவம் செய்பவன் இப்படியே நமக்கு நித்யமாய்ச் செல்லுமென்று மகிழ்ந்திருக்கவேண்டும். ஆக, ஒருவனுக்கு நிகழ்கால மொன்று மட்டும் நன்றாயிருந்துவிட்டால் அவனுக்கு இறந்த காலமும் எதிர் காலமும் நன்றேயென்றதாயிற்று.

## 4. பிள்ளை லோகாசாரியர் பெருமைச் சுருக்கம்

பிள்ளைலோகாசார்யருடைய தனியனில் "ஸம்ஸார போகி ஸந்தஷ்ட ஜீவ ஜீவாதவே" என்றது மிகப் பொருத்தமான விசேஷணம். பாம்பு கடித்துத் துடிக்குமவனை விஷவைத்யன் பிழைப்பூட்டுமா போலே ஸம்ஸார ஸர்ப்பதஷ்டர்களைத் தமது திவ்ய ஸ்ரீஸூக்திகளினால் உஜ்ஜீவிப்பித்தருளினவர் பிள்ளைலோகாசார்யர். இவருடைய திருவாக்குக்களான அஷ்டாதசரஹஸ்யங்களில் ஸ்ரீவசனபூஷணம் தத்வத்ரயம் முமுக்ஷுப்படி என்ற மூன்று ரஹஸ்யங்கள் ஸாரதமங்களாகக் கொள்ளப்பட்டு விளங்குகின்றன. இம்மூன்றையுமே மணவாளமாமுனிகள் வியாக்கியானித்தருளி 'விசதவாக்சிகாமணி' யென்று விருது பெற்றனர்.

இவற்றில் தத்வத்ரயத்தில் ஈச்வர ப்ரகரணத்திலுள்ள *(151)* ஒரு சூர்ணையை மட்டும் ஈண்டெடுத்துக் காட்டி அதன் அரும்பெரும் பொருளை யநுபவிப்போம்.

(மூலம்) *151.* "இப்படி, ஈச்வரன் கல்யாண குணங்களோடே கூடியிருக்கையாலே, பிறர்நோவுகண்டால், ஐயோ! என்றிரங்கி, அவர்களுக்கெப்போதுமொக்க நன்மையைச் சிந்தித்து தனக்கேயாயிருத்தல் தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருத்தல் செய்யாதே. நிலாத்தென்றல் சந்தநம் தண்ணீர்போலே பிறர்க்கேயாய், தன்னையாச்ரயித்தவர்கள் பக்கல் ஜந்மஜ்ஞாநவ்ருத்தங்களாலுண்டான நிகர்ஷம் பாராதே, தாங்களும் பிறரும் தஞ்சமல்லாதபோது தான் தஞ்சமாய், ஸாந்தீபநி புத்ரனையும், வைதிகன் புத்ரர்களையும் மீட்டுக்கொண்டு வந்தாப்போலே அரியன செய்தும், அவர்களபேக்ஷிதங்களைத் தலைக்கட்டியும், அவர்களுக்கு த்ருவபதம் போலே பண்டில்லாதவற்றையு முண்டாக்கியும், தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்க தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி, அவர்கள் கார்யம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய், தான் செய்தநன்மைகளொன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்து, அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி யெல்லா தசையிலும் இனியனாய், பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணாக் கண்ணிட்டிருக்கும் புருஷனைப் போலே. அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால் நினையாதே, குற்றங்களைப் பெரியபிராட்டியார் காட்டினாலும் அவளோடே மறுதலைத்துத் திண்ணியனாய் நின்று ரக்ஷித்து, காமிநியுடைய அழுக்கு உகக்கும் காமுகனைப்போலே அவர்கள் தோஷங்களை போக்யமாகக் கொண்டு அவர்கள்பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனாய், பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படியென்னும்படி தானிடுபட்டு அவர்களுக்குப் பாங்காகத் தன்னைத் தாழவிட்டு அவர்களுக்குக் கட்டவுபடிக்கவுமாம்படி யெளியனாய், அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முன்னணைக் கன்றையும் புல்லிட வந்தவர்களையும் கொம்பிலும் குளம்பிலு மேற்குமாபோலே பெரிய பிராட்டியாரையும் ஸூரிகளையும்விட்டு ஸ்நேஹித்துக்கொண்டுபோரும்.

(விவரணம்) ஸர்வேச்வரன் கீழேவிவரித்த திருக்குணங்களோடு கூடினவனாகையாலே அடியார்பக்கலில் பரிமாறிப்போரும்படிகளைப் பரக்கப் பேசுகிறது இந்த சூர்ணிகை. பிறர் நோவுபடக் கண்டால் காருணிகனாகையாலே ஐயோவென்றீடுபட்டிருப்பன்; ஸௌஹார்த்தவானாகையாலே ஆச்ரிதர்கள் அறிந்த காலத்தோடு

அறிபாத காலத்தோடு வாசியறஎல்லாக் காலத்திலும் அவர்களுக்கு ஸகலவித மங்களங்களையும் ஆசம்ஸிப்பவனாயிருப்பன்; ஆச்ரிதபரதந்த்ரனாகையாலே நிலாத்தென்றல் சந்தனம் தண்ணீர் முதலான அசேதனப் பொருள்களைப் போலே, தனக்கேயாயிருப்பதும் தனக்கும் பிறர்க்கும் பொதுவாயிருப்பதும் மன்றிக்கே பிறர்க்கேயாயிருப்பன்; நாமிருக்கவேண்டிய நிலையைத்தான் ஏறிட்டுக்கொள்வன்.

ஸாம்ய குணயுக்தனாகையாலே அடியார்கள் திறத்தில் பிறப்பு அறிவு நடத்தை முதலியவற்றாலுண்டான தண்மை பாராமல் பரிமாறுவன்;

அசரண்யசரண்யனாகையாலே தாங்களும் தங்களுக்கு ரக்ஷகரன்று, பிறரும் தங்களுக்கு ரக்ஷகரன்று, என்று அறுதியிட்ட நிலைமையில் 'பற்றிலார் பற்ற நின்றானே!' என்கிறபடியே தான் ரக்ஷகனாயிருப்பன்;

ஸத்ய காமனாகையாலே *மாதவத்தோன்புத்திரன் போய் மறிகடல்வாய் மாண்டானை° என்கிறபடியே நெடுங்காலத்திலே கடல் கொண்டுபோன ஸாந்தீபநி புத்ரனையும். °பிறப்பகத்தே மாண்டொழிந்த பிள்ளைகளை நால்வரையும்* என்கிறபடியே ஜனித்தபோதே பெற்ற தாயும் காணப்பெறாதபடி நாய்ச்சிமார் தங்கள் ஸ்வாதந்த்ரியத்தாலே அழைப்பிக்கக் கைதப்பிப்போய் *சுடரொளியாய் நின்ற தன்னுடைச் சோதியிலே கிடந்த வைதிகன் பிள்ளைகளையும் அவ்வவருபங்களோடே மீட்டுக்கொண்டு வந்து கொடுத்தாப்போலே அரியன செய்தும் அடியார் விரும்பினவற்றைத் தலைக்கட்டுவன்;

ஸத்ய ஸங்கல்பனாகையாலே, உத்தாநபாத புத்ரனான த்ருவனுக்கு ஸ்வர்க்கலோகத்தினுடைய மேலெல்லையிலே அபூர்வமாயிருப்பதொரு ஸ்தானத்தைக் கல்பித்துக் கொடுத்தாப்போலே அடியார்களுக்கு முன்பில்லாதவற்றையு முண்டாக்கிக் கொடுப்பன்; இது அபூர்வ போக்யங்களை ஸ்ருஷ்டிக்கவல்ல அமோக ஸங்கல்பனாகையாலே.

[தந்தாம் ஸ்வம் தாந்தாம் விநியோகம் கொண்டாப்போலேயிருக்கத் தன்னையும் தன்னுடைமையையும் வழங்கி] தங்கள்தங்கள் உடைமையைத் தாங்கள்தாங்கள் எடுத்து விநியோகம் கொள்ளுமாபோலே கொள்ளலாம்படி ஆத்மாத்மீயங்களைக் கொடுத்தருளவன். இது ஔதார்ய குணத்தின் காரியம்.

[அவர்கள் காரியம் தலைக்கட்டினால் தான் க்ருதக்ருத்யனாய்] அடியார்களின் காரியம் நிறைவேறினால் அவர்கள் க்ருதக்ருத்யராகையன்றிக்கே தான் க்ருதக்ருத்யனானதாக அபிமானிப்பன்; இது 'க்ருதீ' என்னும் குணத்தின் காரியம்.

[தான் செய்த நன்மைகளில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருதலவத்தையே நினைத்து.] தன் பக்கலிலே 'சரணம்' என்கிற உக்திமாத்ரமாகிற ஸுக்ருதலேசத்தைப் பண்ணினால் அவர்களுக்குத் தான் எல்லா நன்மைகளும் செய்தாலுங்கூட அவற்றில் ஒன்றையும் நினையாதே அவர்கள் செய்த ஸுக்ருத லவத்தையே நினைத்திருப்பன். இது க்ருதஜ்ஞதா கார்யம்.

[அநாதிகாலம் வாஸிதங்களான ரஸங்களை மறக்கும்படி எல்லா தசையிலும் இனியனாய்] நெடுங்காலமே பிடித்துக் கொளுந்திக்கிடக்கிற ப்ராக்ருத விஷயரஸங்

க்ளை அறவே மறக்கும்படி ஸர்வாவஸ்தையிலும் இனியனுயிருப்பன். இது மாதுர்ய மென்னும் குணத்தின் காரியம்.

[பார்யா புத்ரர்கள் குற்றங்களைக் காணுக்கண்ணிட்டிருக்கும் புருஷனைப் போலே அவர்கள் குற்றங்களைத் திருவுள்ளத்தால நினையாதே] மக்கள் மனைவிய ருடனே கூடிவர்த்திப்பானொரு புருஷன் அவர்கள் செய்கிற குற்றங்களைக் கண்டிருக் கச்செய்தேயும் காணுதாரைப் போலேயிருக்குமாபோலே அடியார்கள் செய்த குற்றங்களைக் கண்டிருக்கச்செய்தேயும் திருவுள்ளத்தால் நினையாதிருப்பன். இது சாதுர்ய காரியம். அடியார்களின் குற்றங்களைத் தெரியாதபடி மறைக்க வல்லவ னுகையே சாதுர்யம்.

[குற்றங்களைப் பெரிய பிராட்டியார் காட்டினுலும் அவளோடே மறுதலைத் துத் திண்ணியனுய் நின்று ரக்ஷித்து] சொன்னது செய்யவேண்டும்படி தனக்கு அபிமதையாய் சேதநர்களின குற்றங்களைப் பொறுப்பித்துச் சேரவிடுமவளான பெரியபிராட்டி *தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்* என்கிறபடியே குற்றங் களைக் காட்டினுலும் *என்னடியார் அது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்* என்று அவளோடே மறுதலைத்து நிலகுலையாதே நின்று ரக்ஷிப்பன். இது ஸ்தைர்ய மென்னும் குணத்தின் கார்யம்.

[அவர்கள் பக்கல் கரணத்ரயத்தாலும் செவ்வியனுய்] மனமொழி மெய்கள் மூன்றிலும செவ்வைக் கேடராயிருக்குமவர்கள் திறத்தில், நீர் ஏருத மேட்டு நிலங் களிலே உபாயத்தாலே நீரேற்றுவாரைப்போலே தன்னை அமைதது த்ரிகரணங்க ளாலும் செவ்வியனுய்ப் போருவன். இது ஆர்ஜவமென்னும் குணத்தின் காரியம்.

[பிரிந்தால் அவர்கள் வ்யஸநம் குளப்படி யென்னும்படி தானீடுபட்டு] *ஊர்த்வம் மாஸாந் ந ஜீவிஷ்யே* என்ருல் *நஜீவேயம் க்ஷணமபி* என்கிறபடியே, தன்னைப் பிரிந்தால் அடியார் படும் வ்யஸனமானது, கடல்போன்ற தன் வ்யஸனத் துக்கு ஒரு குளப்படி மாத்திரமென்னுமபடி தான் கிலேசப்படுவன். இது மார்தவ மென்னும் குணத்தின் காரியம் (குளம்பு—அடி, குளப்படி, மிகச் சிறிது என்றவாறு)

[அவர்களுக்குப் பாங்காகத் தனனைத் தாழவிட்டு] பிறவி அறிவு முதலான வற்ருல் தண்ணியராயிருக்குமவர்களுக்கு அநுகூலமாக ஸர்வோத்க்ருஷ்டனுன தன்னைத் தாழவிடுவன். இது ஸௌசீல்ய குணததின் காரியம்.

*[அவர்களுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனுய்]* அவதார தசையிலே நவநீத சௌர்ய வ்யாஜத்தாலே *ஓர்நெடுங்கயிற்ருல் ஊரார்களெல்லாருங்காண வுரலோடே தீராவெகுளியளாய்ச் சிக்கன ஆர்த்து அடிப்ப* என்கிறபடியே யசோ தாதிகளுக்குக் கட்டவுமடிக்கவுமாம்படி எளியனுயிருப்பன் இது ஸௌலப்யகார்யம்.

[அன்றீன்ற கன்றுக்குத் தாயிரங்கி முனனணைக் கன்றையும் புல்லிடவந்தவர் களையும் கொமபிலும் குளம்பிலும் ஏற்குமா போலே பெரிய பிராட்டியாரையும ஸூரி களையும் விட்டு ஸ்நேஹித்துக்கொண்டு போரும்.] அன்று தான் பெற்ற கன்றுக் குத் தாயான பசுவிரங்கி, முன்பு தான் ஸ்நேஹித்துக்கொண்டு போந்த முன்னணைக் கன்றையும், தனக்கு போக்யமான புல்லை யிடவந்தவர்களையுங்கூட மூசிக் கொம்பிலே

ளோத்தெடுப்பது, குளம்பாலே மிதிப்பதாமாபோலே வல்லபையான பெரிய பிராட்டியாரையும், முன்பு ஸ்நேஹவிஷயமாய்ப் போந்த நித்யஸூரிகளேயும் தள்ளிவிட்டு இன்று ஆச்ரயித்தவர்களே ஸ்நேஹித்துக்கொண்டு போருவன். இது வாத்ஸல்ய கார்யம். [இப்போது இவ்வளவு போதும். பிள்ளையுலகாசிரியரின் ஸ்ரீஸூக்தியநுபவம்.]

## 5. மணவாளமாமுனிகள்

மணவாளமாமுனிகளுக்கு யதிவரபுநரவதார பூதரென்னும் ப்ரஸித்தி தொன்று தொட்டு விளங்கி வருகின்றது. எம்பெருமானாரே மீண்டும் மணவாளமாமுனிகளாகத் திருவவதரித்தருளினரென்றபடி. ''ஏராருமெதிராசரென வுதித்தான் வாழியே'' என்று உலகம் வாழ்த்துகின்றது. இதற்குரிய உபபத்திகள் பல பலவுண்டு. அவற்றில் சிலவற்றை ஈண்டு விளக்குகின்றேன்.

1. பெரும்பாலும் வியாக்கியானங்களருளிச் செய்வதிலேயே ஊக்கம் எம்பெருமானார்க்கும் மாமுனிகளுக்கு மொக்கும்; ஸ்ரீபாஷ்யம் வேதாந்த தீபஸாரங்கள், கீதாபாஷ்யம் என்னு மிவை வியாக்கியான க்ரந்தங்களே யன்றோ. மாமுனிகளின் வியாக்கியான க்ரந்தங்களும் ப்ரஸித்தங்கள் வேதார்த்த ஸங்க்ரஹம் கத்யத்ரயம்-என்று சில மூலக்ரந்தங்களும் ஸ்வாமி ஸாதித்தது போலே மாமுனிகளும் யதிராஜ விம்சதி உபதேசரத்தினமாலை முதலிய மூலக்ரந்தங்களு மருளிச் செய்தது ப்ரஸித்தம்.

2. அஸ்தாநே நிந்தாபரிஹாஸங்களே நிரப்பி நூல்களெழுதுவாரு முளரே; அங்ஙனம் நிந்தையையோ பரிஹாஸத்தையோ அணுவளவும் புகவிடாமல் பரம பவித்திர ஸ்ரீஸூக்திகளேயருளுந் தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

3. தொட்ட தொட்ட விடமெங்கும் பலபல சாஸ்த்ரார்த்தத் திரள்களே மலிந்த ஸ்ரீஸூக்திகளினலே பண்டிதர்களின் உள்ளத்தை உகப்பிக்குந்தன்மை ஸ்வாமிக்கும் மாமுனிகளுக்குமே யொக்கும்.

4. எம்பெருமானார் ஸ்ரீபாஷ்யம தொடங்கும்போதே ''பகவத் போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:, தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்ச்யாஸ்யந்தே'' என்றருளிச்செய்து பூர்வாசார்ய ஸூக்திகளில் தமக்குள்ள அபிநிவேசாதிசயத்தை விளங்கக் காட்டியருளினார். மாமுனிகளும் 'முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டு'-*முன்னவராம் நங்குரவர் மொழிகள் உள்ளப் பெற்றோம் முழுதும் நமக்கவை பொழுதுபோக்காகப் பெற்றோம்* இத்யாதிகளாலே தமக்குள்ள பூர்வாசார்யஸூக்தி பஹுமானத்தைக் காட்டியருளினதோடு நில்லாமல் தம்முடைய வியாக்கியான க்ரந்தங்களேப் பூர்வாசார்ய ஸூக்திமயமாகவே அவதரிப்பித்தருளினர்.

5. ஸ்வாமியின் வாழி திருநாமத்திலே *மாறனுரை செய்த தமிழ் மறை வளர்த்தோன் வாழியே* என்று ஓதாநின்றோம். *ஆய்ந்த பெருஞ்சீரார் சடகோபன் செந்தமிழ் வேதந்தரிக்கும் பேராத வுள்ளம்பெற—ஏய்ந்த பெருங்கீர்த்தி யிராமானுச முனிதன் வாய்ந்த மலர்ப்பாதம் வணங்குகின்றேன்* என்று அக்காலத்து சிஷ்ய வர்க்கங்கள் பணிக்கக் காணநின்றோம். இதுபற்றி மாமுனிகள் சிறக்கிலே சொல்ல

வேணுமோ? *சேற்றுக் கமல வயல் சூழரங்கர் தம் சீர்தழைப்பப் போற்றித்தொழு நல்லவந்தணர்வாழ விப்பூதலத்தே, மாற்றற்ற செம்பொன் மணவாளமாமுனி வந்திலனேல், ஆற்றில் கரைத்த புளியல்லவோ தமிழாரணமே* என்ற வொரு பாசுரம் போதுமே. இப்பாசுரத்தை நம்பெருமாள் ஸன்னிதியில் திருவாராதன காலங்களில் மந்த்ரபுஷ்பத்தில் அமுதனுர் ஸேவிக்கும்போது கேட்கச் செவியாயிரம் வேண்டும்.

6. ஸ்வாமி எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகளை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது ஸுப்ரஸித்தம். *லக்ஷ்மீ நாதாக்ய ஸிந்தௌ சடரிபுஜலத:* இத்யாதி ச்லோக ரத்னத்திலும்: இது ஸுவ்யக்தம் மாமுனிகளும் "திரமாக திக்கஜங்களிட்டருளும் பெருமாள்" என்கிற படியே அஷ்ட திக்கஜாசாரியர்களை ஸ்தாபித்தருளி அவர்கள் வழியாக தர்சந நிர்வாஹம் செய்தருள்வது நாடு நகரமும் நன்கறிந்தது.

7. * மன்னியதென்னரங்காபுரி மாமலை மற்றுமுவந்திடு நாள்* என்றும், *ஸ்ரீரங்கம் கரிசைல மஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ.........ஸ்ரீரங்கேச ஜயத்வஜோ விஜயதே ராமாநுஜோயம் முநி;* என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி ஸகல திவ்ய தேசங்களிலும் அபிமானம் காட்டியருளினவர், மாமுனிகளும் *அடைவுடனே திருப்பதிகள் நடந்த வேர்வையாறவோ* என்கிறபடியே திவ்யதேச யாத்திரைகள் செய்தருளி அவற்றில் அபிமானம் காட்டியருளினபடி ஸுப்ரஸித்தம். திவ்ய தேச ச்ரேணியில் சேராதிருந்த ஸ்தலத்தை திவ்யதேசமாக அபிமானித்தலு மாம். ஸ்வாமி திருநாராயணபுரத்திற்கு *ஒரு நாயகமாய்* என்கிற திருவாய் மொழியை ஸமர்ப்பித்து அத்தலத்தை திவ்யதேசமாக அபிமானித்தருளினதும், மாமுனிகள் ராஜமன்னுர் ஸன்னிதிக்கு *தீர்ப்பாரையாமினி' என்கிற திருவாய் மொழியை ஸமர்ப்பித்து அப்பதியை திவ்யதேசமாக அபிமானித்தருளினதும் அநுஸந்தேயம். அப்பதிகத்தில் *எண் துவராபதிமன்னனை.* என்றதை உயிரான பாசுரமாகக் கொண்டருளினர் மாமுனிகள். ராஜமன்னுர் ஸன்னிதியை தக்ஷிண த்வாரகை யென்பர்.

8 ஸ்வாமி சேஷாவதாரமென்பது ஸுப்ரஸித்தம். கருடவாஹன பண்டிதர் பணித்த திவ்யஸூரி சரிதத்திலும், வடுகநம்பி பணித்த யதிராஜ வைபவத்திலும் மற்றும்பல பிரபந்தங்களிலும் இது விசதம். மாமுனிகள், வரவரமுநி சதகத்திலே *துக்தோதந்வத்தவளமதுரம் சுத்தஸத்வைகரூபம் ரூபம் யஸ்ய ஸ்புடயதி தராம் யம்பணீந்த்ராவதாரம்" என்றருளிச்செய்தபடியும், மற்றும் சரித்ரப்ரஸித்தியின்படியும் திருவனந்தாழ்வான் திருவவதார பூதரென்பது ஸுவ்யக்தம்

9. ஸ்வாமி யெம்பெருமானுர் *தென்னரங்கர் செல்வம் முற்றும் திருத்தி வைத்தான் வாழியே* என்று எண்டிசையும் வாழ்த்துகிறபடியும் கோயிலொழுகு முதலானவற்றில் காண்கிற இதிஹாஸ விஸ்தாரப்படியும் ஸ்ரீரங்கஸ்ரீயை வளர்த்தருளினவரென்பது விச்வவிதிதம். மணவாள மாமுனிகள் திறத்தும் இங்ஙனேயன்றோ? "அரங்கநகர்வாழ இன்னுமொரு நூற்றாண்டிரும்" என்றன்றோ நிச்சலும் வாழ்த்துகின்றதுலகம்.

ஆக இவ்வொன்பது படிகளாலே எம்பெருமானுரும் மணவாள மாமுனிகளும் ஒற்றுமை பெற்றவர்களாவர். இவ்வொற்றுமைகளில், 1, 2, 3, லக்கமிட்ட நிருபணங்கள் மூன்றும் மிகப் பொருத்தமானவை இவைமூன்றும் இவ்விருவர்க்கே அஸாதாரணமானவை. ... ... ... ...

## மாமுனிகளின் ஸ்ரீஸூக்திப் பெருமையைப்பற்றி இதிஹாஸமொன்று கேளீர்.

ஸ்ரீ காஞ்சீபுரியில் எண்பது வருஷங்களுக்கு முன்னே ஸ்ரீமத் திருப்புட்குழி யப்பாஸ்வாமி யென்கிற மஹான்–மஹாமஹோபாத்யாய ஸ்ரீக்ருஷ்ண தாதாசார்ய ஸ்வாமி எழுந்தருளியிருந்தார். உண்மையாகவே அவரை சதுச்சாஸ்த்ர வித்வானென்று பலரும் பகர்வர். அப்பய தீக்ஷிதர்க்கு நாராயணத்வேஷம் போலே அவர்க்கு ஸ்ரீமத் வரவரமுநித்வேஷம் ஜன்மஸித்தமா யிருந்தது. ஒருநாள் தம்முடைய காலக்ஷேப கோஷ்டியில் ஸ்ரீவசனபூஷண வியாக்கியானத்தில் ஒரு ஸ்ரீஸூக்தியை யெடுத்து அட்டஹாஸமாக தூஷித்தாராம். (அதன் விவரணம் கேளீர்;) ஸ்ரீவசனபூஷணத்தில் 162-ஆம் சூர்ணிகை ஹாரோபி என்னுமிவ்வளவே. இது ஸ்ரீராமாயணச்லோகம். பெருமாள் அருளிச்செய்தது. "ஹாரோபி நார்ப்பித: கண்டே ஸ்பர்ச ஸம்ரோதபீருணா, ஆவயோரந்தரே ஜாதா: பர்வதாஸ் ஸரிதோத்ருமா:" என்பது பூர்ணச்லோகம். (இந்தச்லோகம் ஸ்ரீராமாயணத்தில் பல பதிப்புக்களில் காண்பதில்லை. அது நிற்க.) இந்த ச்லோகத்தை வியாக்கியானித்தருளாநின்ற மணவாளமாமுனிகள் "பீருணா என்கிற லிங்க வ்யத்யயம் ஆர்ஷம்" என்று முந்துற முன்னம் அருளிச்செய்து, உடனே "அன்றிக்கே, லிங்கானுகுணமாகப் பெருமாள் தம்மளவிலே யோஜிக்கவுமாம்" என்றருளிச் செய்துள்ளார். இங்கு என்ன விஷயமென்றால், (ஸ்ரீராமாயண) மூலத்தில் கர்த்ருபதம் ஸ்பஷ்டமாக இல்லை. 'பீருணா ஸீதயா, பீருணா மயா' என்று இரண்டு படியும் விவக்ஷிதமாகலாம். இதில் ப்ரதமகல்பம் ஸ்வரஸமாகையாலே மாமுனிகள் பீருத்வத்தைப் பிராட்டியிடத்திலேயாக்கி முன்னம் வியாக்கியானித்தருளினர், அங்ஙனேயாகில் (ஸ்த்ரீலிங்கரூபம்) பீர்வா என்றிருக்க வேணுமேயல்லது பீருணா என்றிருக்கத்தகாதேயென்று சோத்யம் வருமென்றுதிருவுள்ளம்பற்றி "லிங்கவ்யத்யயம் ஆர்ஷம்" என்றருளிச்செய்தார் மாமுனிகள். லிங்கவ்யத்யயம் கொள்ளாமலும் (பும்லிங்கமாகவே வைத்தும்) நிர்வஹிகலாம் என்பதை யோஜநாந்தரமாகக் காட்டியருளினர். மேலே ப்ரஸ்தாவிக்கப்பட்ட திருப்புட்குழி ஸ்வாமி இதைக்கண்டு மருண்டு ஒருநாள் தமது ப்ரவசன கோஷ்டியில் இவ்விடத்தைப் பிரஸ்தாவித்து "பீருணா பீர்வா" என்று இரண்டு ரூபமும் உண்டாகையாலே இங்கு ஆர்ஷவ்யத்யய மென்பதற்கு ப்ரஸக்தியே கிடையாது; மணவாளமாமுனி ஏதோ மருண்டு எழுதிவிட்டார். சப்த மஞ்ஜரியில் (கர்த்ருணா, கர்த்ரா) என்று நீங்கள் வாசித்ததில்லையா? 'பாஷித பும்ஸ்கம் பும்வத் காலவஸ்ய' என்று வ்யாகரணநுசாஸன முள்ளது— என்று பலவும் பொழிந்துவிட்டார். யார்? மஹாமஹோபாத்யாய திருப்புட்குழி ஸ்வாமி. அந்த ப்ரவசன கோஷ்டியில் இருந்த ஸ்ரீ வரவரமுநி பக்தரான ஒரு ஸ்வாமி இதைக் கேட்டிருந்து அங்கு வடவண்டைமாடவீதியி லெழுந்தருளியிருந்த (கீர்த்திமூர்த்தியான) கோயில் கந்தாடை அண்ணன் ஜடப்ரோல். சப்தகுஞ்சேத்தீபம். ரங்காசாரியர் ஸ்வாமியிடம் இந்த தூஷணத்தை ப்ரஸ்தாவித்தார்; அந்தஸ்வாமி மஹாபாஷ்யாந்த ப்ரசண்ட பண்டிதர், அவரிடத்தில்தான் திருப்புட்குழி ஸ்வாமி வியாகரண மதிகரித்தாராம். மேற்சொன்ன ப்ரஸ்தாவத்தைக் கேட்டருளின ஜடப்ரோல்ஸ்வாமி திருப்புட்குழி அப்பாவைவரவழைத்து 'அப்பா! பாம்புப்புற்றிலே கைவைக்காதே, வாய்வைக்காதே

கொண்ட நாம் உயிரையும் கொள்ளவேணுமோ? இந்தமலையே நமக்கு ரக்ஷகமென்று நாம் அடியிலே சொன்ன சொல்லை மெய்யாக்கி இம்மலையைக் கொண்டே மழைக் கஷ்டத்தைத் தடுத்து விடுவோமாகில் அவன் கைசலித்தவாறே தானே ஓய்ந்து நிற்கிறனென்கிற விசாலமான திருவுள்ளத்தினுல்—என்பது இதற்கு ஸமாதானம்.

ஏழு பிராயத்துச் சிறுவன் மலையெடுத்து நின்ற அதிமாநுஷ சேஷ்டிதங்கண்டு ஆச்சரியப்பட்ட ஆயர்கள் இவனுடைய பிறப்பிலே சங்கை கொண்டு "தேவோ வா தாநவோ வா த்வம் யக்ஷோ கந்தர்வ ஏவ வா?" என்று, நீ தேவனு? தானவனு? யக்ஷனு? கந்தர்வனு? என்று கேட்டவளவிலே *க்ஷணம் பூத்வா த்வஸௌ தூஷ்ணீம் கிஞ்சித்ப்ரணயரோஷவாந்* என்கிறபடி — அப்படி அவர்கள் கேட்டதற்குச் சீற்றங் கொண்டதாக வுள்ளது. சீற்றங்கொள்ளும்படியாக அவர்கள் ஒன்றும் கேட்கவில்லையே! அப்படியிருக்க நீ சீற்றங் கொண்டது ஏன்? என்பது மூன்றுவது கேள்வி. இடையர்களிலே கடை கெட்ட இடையனைத் தான் வந்து பிறந்திருக்கச் செய்தே ஸஜாதீயனை விஜாதீயனுக்கிக் கேள்வி கேட்பது தவருதலால் சீற்றமுண்டாயிற்றென்றுஸமாதானம். இத்தால் கண்ணபிரானுக்கு தேவத்வத்திலுங்காட்டில் கோபாலத்வமே உகப்புக்கிடமானதென்று விளங்கும். அப்படிப்பட்ட அர்த்தங்களை விளங்கச் செய்யும் கேள்விகளன்றோ இவை. ... ... ... ... *

## கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தி ரஸாநுபவமொன்று காண்மின் கேண்மின்

பகவத்கீதை பத்தாவது அத்யாயத்தில் ஒன்பதாவது ச்லோகம்—

"மச்சித்தா மத்கதப்ராணு போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச" என்பது. இந்த ச்லோகம் பாகவத சிகாமணிகளின் அழகிய போதுபோக்கைப் பற்றிப் பகவான் [கீதாசார்யன்] பரமஸந்தோஷம் பொலியச் சொன்னது. பாகவதர்கள் இப்படி வர்த்திக்க வேணுமென்று சிக்ஷிக்கின்றதாகவும் அமைந்துள்ளது இந்த ச்லோகம். இதை நெஞ்சில் ஆவ்ருத்தி பண்ணப் பண்ண விலக்ஷணமான வோர் ஆனந்தம் பக்தர்களுக்கு உண்டாகியே தீரும். திருமழிசைப் பிரான் நான்முகன் திருவந்தாதியில் "தெரித் தெழுதி வாசித்துங்கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்த பாசுரம் இந்த கீதா ச்லோகத்தை யடியொற்றியே யென்று சொல்லலாம்,

கீதைக்குப் பல பாஷ்யங்கள் அவதரித்திருந்தாலும் நம் ஸ்வாமி எம்பெருமானருளிச் செய்திருக்கும் பாஷ்யத்தின் மாதுர்யமும் காம்பீர்யமும் ஒப்புயர்வற்றது. அதிகமான விரிவு இன்றிக்கே ஸங்க்ஷிப்தமாகவே யிருந்தாலும் அர்த்தபுஷ்டி அந்யாத்ருச மென்பதை அநுபவ ரஸிகர்களே அறியமுடியும். வியாக்கியான சைலியை ஆழ்ந்து நோக்குமிடத்து எம்பெருமானரும் மணவாள மாமுனிகளும் அபிநவ்யக்திகளே யென்று அறுதியிடத் தட்டில்லை. அது நிற்க,

ப்ரக்ருத ச்லோகத்தின் முடிவில் "துஷ்யந்தி ச ரமந்தி ச" என்றுள்ளது க்ரியா பதங்களிரண்டுக்கும் 'ஸந்தோஷிக்கிருர்கள்' என்பதொன்றே பொருளாகத் தேறுகின்றது. இந்த புநருக்தி எதற்காக வென்று ஆராயும்போது பாஷ்யங்களை யெடுத்துப் பார்க்க ஆவல் கிளர்கின்றது. சங்கரபாஷ்யத்தைப் பார்த்தாலோ அதில், "துஷ்யந்தி—பரிதோஷ முபயாந்தி; ரமந்தி ச —ரதிஞ்ச ப்ராப்நுவந்தி" என்றுள்ளது.

பரிதோஷமாவது என்ன? ரதியாவது என்ன? என்பதை நுண்ணுணர்வினர் நுட்பமாக அறிவர் போலும். இனி மத்வ பாஷ்யத்தைப் பார்த்தாலோ, இங்கு 8, 9,10,11 ஆகிய நான்கு ச்லோகங்களுக்கு பாஷ்யமே கிடையாது. "ஸந்தி ச பஜந்த: கேசித் இத்யாஹ அஹமித்யாதிநா" என்று எட்டாவது ச்லோகத்திற்கு அவதாரிகையிட்டு, மேல் பதினோராவது ச்லோகம்வரையில் ஸ்பஷ்டார்த்தகமென்று முடித்திட்டார். அந்த பாஷ்யத்தின் ப்ரக்ரியை பெரும்பாலும் இத்தகையதே.

இனி நம் ஸ்வாமியின் பாஷ்ய ஸூக்திகள் காண்மின்; [துஷ்யந்தி ச ரமந்தி ச] "வக்தாரஸ் தத்வசநேந அநந்யப்ரயோஜநேந துஷ்யந்தி; ச்ரோதாரச்ச தத்ச்ரவணேந அநவதிகாதிசய ப்ரியேண ரமந்தே" என்றுள்ளது. பகவத் கதைகளைச் சொல்லி மகிழ்வார் சிலர்; அவற்றைக் காதாரக் கேட்டு மகிழ்வார் சிலர். இவ்வகையான பேதத்தையிட்டு க்ரியாபத பேதம் செய்ததாக ஸ்வாமி திருவுள்ளம் பற்றுகிறார். மூலத்தில் 'போதயந்த: பரஸ்பரம்" என்றிருப்பதனாலே வக்தாக்களும் ச்ரோதாக்களுமாக இரண்டு வகுப்பினர் அவசியம் தேறுகிறார்கள். அவ்விரு வகுப்பினரிடத்தும் அந்வயிக்குமாறு இரண்டு க்ரியா பதங்களை கீதாசார்யன் ப்ரயோகித்திருப்பதாக மருமம் கண்டறிந்து உரை செய்திருப்பது ஸ்வாமி ராமாநுஜர்க்குத் தன்னேற்றம்.

இந்த நுண்பொருளை ஸ்வாமி கண்டறிந்ததானது-முன்னே நாம் காட்டிய திருமழிசைப்பிரான் பாசுரங்கொண்டேயென்னலாம். அதில், வக்த்ருத்வம் ச்ரோத்ருத்வமாகிய இரண்டும் ஆழ்வார்க்கே காலபேதேந இருப்பதாகக் காட்டப்பட்டிருக்கிறது. எங்ஙனேயென்னில்; "தெரிததெழுதி வாசித்தும் கேட்டும்" என்றவதில் தெரிக்கையாவது—தெரிவிக்கை; ப்ரவசநப் பண்ணுகை. அது ஒரு காலத்தில்; மற்றொருகாலத்தில் பிறர்சொல்ல ச்ரவணம் செய்கையை 'கேட்டும், என்பதனால் குறித்தனர். ஆக ஒரு வ்யக்திக்கே காலபேதத்தாலே சொல்லுவதும் கேட்பதும் ஸம்பாவிதமேயாதலால், சொல்லும்போது உண்டாகு மானந்தத்தை 'துஷ்யந்தி' என்பதனாலும், கேட்குங்காலுண்டாகு மானந்தத்தை 'ரமந்தி' என்பதனாலும் கீதாசார்யன் குறிப்பிட்டதாகக் கொள்வது சிறக்கும்.

## ஜநந்யாசார்யர் காட்டின பட்டர் திருவாக்கு

நாம் ஸ்ரீ வைஷ்ணவர்கள்; நம்முடைய லக்ஷணத்தை விளக்கவந்த சாஸ்த்ரங்கள் பலமுகமாகப் பேசியுள்ளன. "யே கண்டலக்நதுலஸீநளிநாக்ஷ மாலா: யே பாஹுமூல பரிசிஹ்நிதசங்கசக்ரா:, யே வா லலாடபலகே லஸதூர்த்வபுண்ட்ரா: தே வைஷ்ணவா புவநம் ஆசு பவித்ரயந்தி." என்கிற சுலோகம் பெரும்பாலும் பலருமறிந்ததேயாகும் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு இருக்கவேண்டிய வெளிவேஷங்களை மாத்திரம் இந்த ச்லோகம் தெரிவிக்கின்றதேயன்றி அந்த:கரணத்தில் இருக்கவேண்டிய அம்சங்களில் ஏகதேசத்தையும் தெரிவிக்கவில்லை. அவற்றைத் தெரிவிக்கின்ற ச்லோகங்களும் இதிஹாஸ புராணங்களில் மலிந்துகிடக்கின்றன. பகவத்கீதையில் பத்தாவது அத்யாயத்தில் (ச்லோ. 5) "அஹிம்ஸா ஸமதா" என்றவிடத்தில் ஸமதா என்பதை விவரித்தருளா நின்ற நமது பாஷ்யகாரர் "ஸமதா—ஆத்மநி ஸுஹ்ருத்ஸு விபக்ஷேஷு ச ஸமமதித்வம்" என்றுரைத்தருளினார். அங்கு தாத்பர்ய

(கருத்து.) எனது மனமே! இதற்கு முற்காலமெல்லாம் பிறப்பதுமிறப்பதுமாகி அநாதி ஸம்ஸாரத்தில் பட்டபாடுகளையெல்லாம் மறந்துவிட்டாய் போலும்; உன் பேதைமையை என் சொல்லுவது? உனக்கு ஒருறுதி கூறுகின்றேன்; (அதாவதென்னென்னில்;) இன்று தொடங்கிப் பெரும்பூதூர் மாமுனியாகிய எதிராசருடைய திருநாமங்களை யோது; (அங்ஙனம் செய்தால்) பிறவிகள் இனி உனக்கு உண்டாக மாட்டா. ... ... ... ... ...

### கூரத்தாழ்வான் காப்பு

முக்கால மில்லா முகில்வண்ணன் வைகுந்தத்து
எக்காலஞ் செல்வா னிருக்கின்றேன்—தக்காரெண்
கூரத்தாழ் வானடியைக் கூடுதற்கு நாயடியேன்
போரத்தாழ் வானசடம் போட்டு.

(கருத்து.) நீசனனவடியேன் மிக இழிவான ஜடப்பொருளாகிய இவ்வுடலை இங்கு விட்டிட்டு யோக்யர்கள் சிந்திக்கும் கூரத்தாழ்வான் திருவடிகளைச் சேர்வதற்கு, காலம் நடையாடாத எம்பெருமானது திருநாட்டிலே என்றைக்குச்சென்று சேரப்போகிறேனோ? இந்நூலாசிரியரான ஐயங்கார் பட்டர் திருவடிகளில் ஆச்ரயித்து உய்ந்தவராதலால் அவ்வாசிரியருடைய திருத்தகப்பனுரென்னுங் காரணத்தினுலும், தமக்குத் தந்தையான அமுதனருடைய ஸாக்ஷாதாசார்யரென்னுங் காரணத்தினுலும் கூரத்தாழ்வானைத் துதித்தபடி. பரமபதம் சேர்தலை ஆசார்யன் திருவடி சேர்தலாக வழங்குகிற ஸம்பிரதாயம் இச்செய்யுளில் தெரிவிக்கப்பட்டமை காண்க. உடல் அறிவில்லாத பொருளாதலால் ஜடமெனப்பட்டது. (ஈற்றடி: போர, தாழ்வு, ஆன, சடம்.)

### ஸ்வாசார்யரான பட்டர் காப்பு

நான்கூட்டில் வந்தவன்றே நானறியா நன்மையெல்லாம்
தான்கூட்டி வைத்தநலந் தான்கண்டீர்—ஆங்கூட்டச்
சிட்டருக்கு வாய்த்த திருவரங்க வின்னருளால்
பட்டருக்காட் பட்ட பயன்.

(கருத்து.) திரள் திரளான மஹான்களுக்குப் பாக்கியமாகவாய்த்த ஸ்ரீரங்கநாதனுடைய நிர்ஹேதுக கிருபையினுல், நான் இவ்வுடலோடு வந்து பிறந்தநாள் தொடங்கி நானறியாத நலங்களையெல்லாம் தான் உண்டாக்கிய நன்மையென்பது ஸ்ரீ பராசரபட்டரென்னுமாசாரியர்க்கு சிஷ்யனுக அமையப்பெற்றதாகிய பயனும்.

### —திருப்பதிகளின் தொகுப்பு—

ஈரிருப தாஞ்சோழம் ஈரொன்ப தாம்பாண்டி
ஓர்பதின்மூன் றும்மலைநா டோரிரண்டாம்—சீர்நடுநா
டாறேடீ ரெட்டுதொண்டை அவ்வடநா டாறிரண்டு
கூறுதிரு நாடொன்றுக் கொள்.

(கருத்து.) சோழநாட்டிலுள்ள திருப்பதிகள் நாற்பதாகும்; பாண்டி நாட்டிலுள்ள திருப்பதிகள் பதினெட்டாகும்; மலையாள நாட்டிலுள்ள திருப்பதிகள் பதின்மூன்றுகும்; சிறந்த நடுநாட்டுத் திருப்பதிகள் இரண்டாகும்; தொண்டைநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டாகும்: தூரத்திலுள்ள வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டாகும், சிறப்பாகக் கூறப்படுகிற திருநாடு ஒன்றுகும்; ஆக நூற்றெட்டுத் திருப்பதிகள்.

——

# ஆசார்ய ஸூக்தி யநுபவப் பகுதி ★ ★ ★

எம்பெருமானைத் துதிக்கின்ற பக்தமணிகள் தங்களுடைய பலவகையான அநுபவங்களில் விலக்ஷணமான ஓர் அநுபவத்தைக் காட்டுவதுண்டு; அதாவதென்னென்னில், எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்கிற முகத்தால் ஒருவகையான குணநுபவம் பண்ணுவது. பொய்கையாழ்வார், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலானோர் இவ்வநுபவத்திற்கு வழிகாட்டிகளாக அமைந்தனர். பொய்கையார் முதல்திருவந்தாதியில் (69) *பாலன் தனதுருவாயேழுலகுண்டு, ஆலிலையின் மேலன்று நீவளர்ந்த மெய்யென்பர்—ஆலன்று வேலை நீருள்ளதோ விண்ணதோ மண்ணதோ? சோலைசூழ் குன்றெடுத்தாய் சொல்லு.* என்று கேட்கிறார். நம்மாழ்வாருடைய வினக்கள் பல பல. ஒன்றே கேண்மின்; பெரியதிருவந்தாதியில் *சீரால் பிறந்து சிறப்பால் வளராது, பேர் வாமனாகாக்கால் பேராளா!—மார்பாரப், புல்கி நீயுண்டுமிழ்ந்த பூமி நீரேற்பரிதே? சொல்லு நீ யாமறியச் சூழ்ந்து*. என்பது. திருமங்கையாழ்வாருடைய வினக்களிலும் ஒன்று கேண்மின்; (பெரியதிருமொழி 7-9-7) *சேயோங்கு தண் திருமாலிருஞ்சோலை மலையுறையும் மாயா! எனக்குரையாயிது, மறை நான்கினுளாயோ? தீயோம்பு கைம்மறையோர் சிறுபுலியூர்ச் சலசயனத்தாயோ? உனதடியார் மனத்தாயோ?* என்பது. இந்த வினக்களை விவரித்து அநுபவித்தால் இன்சுவை பெருகும். ஆழ்வானுடைய ஸ்தவங்களில் அதிமாநுஷ, ஸுந்தரபாஹு, வரதராஜ ஸ்தவங்களிலே வெகுரஸகனமான கேள்விகள் அமைந்துள்ளன. திருமாலிருஞ்சோலை யழகரை நோக்கிக் கேட்கிற மூன்று கேள்விகள் அமைந்த ஒரு ச்லோகத்தை மாத்திரம் இங்கு சுருக்கமாக அநுபவிப்போம்.

''கூஹிதஸ்வமஹிமாபி ஸுந்தர! த்வம் வ்ரஜே கிமிதி சக்ரமாக்ரமீ:?
ஸப்தராத்ரமததாச்ச கிம் கிரிம்? ப்ருச்சதச்ச ஸுஹ்ருத: கிமக்ருத:?''

என்பது ஸுந்தர பாஹுஸ்தவத்தில் 112-ஆம் ச்லோகம்.

இதிலுள்ள மூன்று கேள்விகளாவன.—ஸௌலப்ய ஸௌசீல்யங்களையே காட்டிப் பரத்வத்தை யொளித்து மாநுஷ்யகம் கொண்டாட வந்த விடத்திலே பரத்வம் விளங்கும்படியான செய்கைகளையும் இடையிடையே வெளியிட்டது எதற்காக? என்பது முக்கியமான கேள்வி. அழகரே! தேவரீர் °ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளிந்து வளர்ந்தது ஸ்வகீய சக்தி விசேஷங்களையெல்லாம் மறைத்துக் கொண்டல்லவோ? அப்படியிருந்தும், நெடுநாளாகத் திருவாய்ப்பாடியில் நடந்துவந்த தேவேந்திர ஸமாராதனையைத் தடுத்தது ஏன்? என்பது முதற் கேள்வி. இதற்கு எம்பெருமான் (அல்லது அவனுடைய பிரதிநிதிகள்) சொல்லக்கூடிய ஸமாதானம் என்னவெனில்; பராத்பரனான தான் வளருகிறவூரிலே தேவதாந்தரத்திற்கு ஆராதனை யாவதென்? என்றிருந்தபடியாலே தடுத்ததாக.

அவ்விந்திரன் ஏழு நாள் கல்மழை பெய்வித்து ஆயர்களுக்கும் ஆநிரைகளுக்கும் பொறுக்கொணாத் தீங்கை விளைத்தபோது அவனைத் தலையறுத்துத் தொலைக்கவேண்டியிருக்க, அது செய்யாதே கோவர்த்தனமலையைக் கொற்றக் குடையாக ஏந்தி நின்றதென்? என்பது இரண்டாவது கேள்வி. 'இந்திரனது உணவைக்

என்றாராம். 'அடியேனுக்குப் புரியவில்லையே, என்ன விவக்ஷை?' என்று சொல்லிக் கொண்டே *பாஷிதபும்ஸ்கம் பும்வத் காலவஸ்ய* என்று வாயெடுத்தாராம்; உடனே ''உனக்கு நான் வியாகரணஞ் சொல்லிப் பாழாய்ப் போனேன்'' என்று ஸாதித்து 'அந்த அநுசாஸனத்தில் பும்லிங்க நபும்ஸகலிங்க மிரண்டொழிய ஸ்த்ரீலிங்க சப்தத்திற்கு ஏதேனும் ப்ரஸக்தியுண்டோ? ஏனிப்படி அஸ்தாநே மருண்டாய்? மணவாள மாமுனிகள் ஸன்னிதியிலே போய்த்தண்டன் ஸமர்ப்பித்து விட்டு வா'' என்று ஸாதிக்க, அப்படியேசென்று ஸேவித்துவந்தாராம். இது மிகவும் ப்ரஸித்தம்.

——x——

## ஸ்ரீ மாலோல வித்வத்ஸதஸ்ஸின் ஸமாப்தி

நேற்று ஆவணி மாதத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகிய சிங்கர் திருமுன்பே இங்குநடைபெற்ற மாலோல வித்வத்ஸதஸ்ஸைப்பற்றி முன்னிதழில் சிறிது தெரிவித்திருக்கிறோம். 8-9-75 திங்கள் ஹஸ்த நக்ஷத்திரத்தன்று ஸ்ரீஸ்வாமியின் திருநக்ஷத்ரோத்ஸவமாதலால் முதல்நாள் ஞாயிற்றுக்கிழமை மாலையோடு வித்வத்ஸதஸ்ஸு ஸமாப்தி பெற்றது. அன்றிரவு ஸ்ரீ அழகியசிங்கரின் மதுர ஸ்ரீஸூக்திவர்ஷம் நடைபெற்றதாகக் கேள்விப்பட்டோம். முன்னம் தெரியாமையாலே அதை யநுபவிக்க ப்ராப்தமாகவில்லை. (ஒன்பதாவது நாளாகிய) அன்று ஸ்ரீ அழகியசிங்கரின் நியமனங்கொண்டு தத்வமுக்தாகலாபத்தின் மங்கள ச்லோகமாகிய 'லக்ஷ்மீ நேத்ரோத்பலஸ்ரீ' இத்யாதிச்லோகரத்னத்தின் சீரிய பொருளை அடியேன் விரிவாக உபந்யஸித்துத் தலைக்கட்டினேன். [அவ்வுபந்யாஸம் இவ்விதழில் மேலே பிரசுரமாகும்.] அதன்பிறகு ஒருபண்டிதர் (அல்லது பண்டிதம்மந்யர்) ''அடியேன் நாலு வார்த்தை சொல்லுகிறேன்; *விசேஷதஸ் ஸர்வவிதாம் ஸமாஜே விபூஷணம் மௌநம் அபண்டிதாநாம்* என்பதை அடியேன் அறிந்துவைத்தும் ஏதோ நப்பாசையினால் சில சொல்லத் தொடங்குகிறேன்'' என்று பீடிகையிட்டுத் தலைகாலில்லாமல் ஏதோ சொல்லிக் கொண்டிருந்தார். அப்போது ஸ்ரீ அழகியசிங்கர் எழுந்து பின்புறம் எழுந்தருளியாயிற்று. ஸந்த்யா காலமுமாய்விட்டது. அடியேனும் மற்றும் பலரும் எழுந்து வந்துவிட்டோம்.

வடதிசையிலிருந்து இடையில் வந்தவொரு தாக்ஷிணாத்யர். ஸதஸ்ஸில் தாம்தாம் கற்றவற்றை விஜ்ஞாபிக்கவந்தவர்கள் வருந்தும்படி அர்த்தமில்லாத சப்தராசிகளை ஒருவர்க்கும் புரியாதபடி கோஷித்துக் கொண்டிருந்தார். அவருடைய பெயர் ''ரஜகப்ரியதத்பத்நீப்ரியராஸபபண்டித:'. என்பதாம். இஃதொன்றே பலர் வெறுக்கும்படியாயிருந்தது. ''உச்சைருத்குஷ்ய ஜேதவ்யம் மத்யஸ்தச் சேத் அபண்டித:'' என்பது ப்ரஸித்தம். ஸதஸ்ஸுக்கு அத்யக்ஷரும் மத்யஸ்தரும் ஸ்ரீ அழகியசிங்கரேயாயிருந்தபடியாலும், ஸ்வாமிதாமும் ப்ராமாணிக வித்வத்வரிஷ்டராகையாலும் இந்த வீணைஉத்கோஷங்களினால் சாஸ்த்ரார்த்தக்ஷோபம ஏதும்விளையவில்லை யென்பதே ஸதஸ்யர்களுக்கு ஸந்தோஷஸ்தானம். சுருங்கச் சொல்லில், வித்வத்ஸதஸ்ஸு ஒன்பது நாளும் மிக அற்புதமாக நடைபெற்றது. இந்த வியாஜத்தினால் நாற்றிசையிலுமுள்ள வித்வான்களையும் வைதிகர்களையும் மஹநீயர்களையும் ஸ்நிக்தர்களையும் வித்யார்த்திகளையும் காணநேர்ந்தது காஞ்சீவாஸிகளின் அபூர்வபாக்யமாகும். விசிஷ்ய அடியேனுடைய பரமபாக்யமாகும் ஸ்ரீ அழகிய சிங்கரின் ஔதார்யம் அளவிடமுடியாததாயிருந்தது. பல்லாண்டு பல்லாண்டு.

———



# பிள்ளைப்பெருமாள் பாசுரப் பகுதி

திவ்ய கவி. பிள்ளைப்பெருமாளையங்கார் பிரபந்தங்களில் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதி யென்னும் பிரபந்தம் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு மிக முக்கியமானதென்றும், அதனைக் கண்டபாடம் செய்வதும் மிக முக்கியமானதென்றும் ஏற்கெனவே தெரிவித்திருக்கிறோம் அந்தப் பிரபந்தத்தின் தொடக்கத்தில் ஆழ்வார்கள் பன்னிருவர்க்குப், விசேஷித்து நம்மாழ்வார்க்குப், எம்பெருமானார்க்கும், கூரத்தாழ்வானுக்குப், அவரது திருக்குமாரரான பட்டர்க்கும் காப்புச் செய்யுள்கள் அற்புதமாக அமைந்துள்ளன; அவற்றைச் சுருக்கமான கருத்துரையுடன் இங்குத் தருகிறோம். இவற்றை மட்டுமாவது மனப்பாடஞ்செய்தல் நன்று.

### ஆழ்வார்கள் பன்னிருவர் காப்பு.

பொய்கைபூ தன்பேயார் பொன்மழிசைக் கோன்மாறன்
செய்ய மதுரகவி சேரர்பிரான்—வையகமெண்
பட்டர்பிரான் கோதைதொண்டர் பாதப் பொடிபாணன்
கட்டவிழ்தார் வாட்கலியன் காப்பு

(கருத்து) பொய்கையார் பூதத்தார் பேயார் திருமழிசைப்பிரான் நம்மாழ்வார் குணசாலியான மதுரகவியாழ்வார் குலசேகராழ்வார் உலகத்தாரால் நன்கு மதிக்கப்பெற்ற பெரியாழ்வார் ஆண்டாள் தொண்டரடிப்பொடியாழ்வார் திருப்பாணழ்வார், விகஸித்த மாலையையணிந்தவரும் வாட்படையையுடையவருமான திருமங்கையாழ்வார் ஆகிய பன்னிருவர் நமக்கு ரக்ஷகராகுக. ... ...

### நம்மாழ்வார் காப்பு

பிறவாத பேறு பெறுதற்கெஞ் ஞான்றும்
மறவா திறைஞ்சென் மனனே!—துறவாளன்
வண்குருகூர் வாவி வழுதிவள நாடுடைய
தண்குருகூர் நம்பிதிருத் தாள்.

(கருத்து.) எனது நெஞ்சமே! விஷய விரக்தி பூண்டவரும் அழகிய நீர்ப்பறவைகள் உலாவப்பெற்ற ஜலாசயங்கள் சூழ்ந்த பாண்டிநாட்டுத் தலைவருமான நம்மாழ்வாருடைய திருவடிகளை மீண்டு மீண்டும் பிறவாமையாகிற பேறுபெறுதற்காக எப்போதும் மறவாமல் வணங்கு. மூன்றுமடியில், குருகு ஊர் என்று பிரியும்.

### எம்பெருமானார் காப்பு

முன்னே பிறந்திறந்து மூதுலகிற் பட்டவெல்லாம்
என்னே மறந்தனையோ என்னெஞ்சே!—சொன்னேன்
இனியெதிரா சன்மங்கள் இன்றுமுதல் பூதூர்
முனியெதிரா சன்பேர் மொழி.

சந்த்ரிகையில் தேசிகன் *ஸமமதிராத்ம ஸுஹ்ருத்விபக்ஷபக்ஷே—இதி பகவத்பரா சரவசந மிஹ தத்தத்பதை: ஸ்மாரிதம்' என்றருளிச் செய்தார்.

ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் (3-7-20) *நசலதி நிஜவர்ணதர்மதோ ய: ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே, நஹரதி நச ஹந்தி கிஞ்சிதுச்சை: ஸிதமநஸம் தம வேஹி விஷ்ணு பக்தம்* என்றுள்ள சுலோக ரத்நமே இங்கு எடுத்துக்காட்டப்பட்டதாயிற்று. இதில் 'ஸமமதிராத்ம ஸுஹ்ருத் விபக்ஷபக்ஷே' என்கிற இரண்டாவது பாதம் முக்கியமாகக் கணிசிக்கத் தக்தது. தன்னிடத்திலும் தன் நண்பர்களிடத்திலும் தன் பக்கலில் பகை பாராட்டுமவர்களிடத்திலும் ஒரு நிகரான புத்தியையுடையவனுயிருப்பவன் எவனே அவனேஸ்ரீவைஷ்ணவன் என்று இதனுல் தெரிவிக்கப்படுகின்றது. இப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவத்வம் ப்ரஹ்லாதாழ்வான் போல்வாரிடத்தில் இருந்ததாகக் கதைகளில் கேட்டுவருகின்றோ மத்தனையல்லது இக்காலத்தில் சில வ்யக்திகளிடத்திலாவது இதைக் காண முடியுமோ என்று பார்த்தால் முடியாதென்றே முடிவு கட்டவேண்டியதாகும்.

முற்காலத்தில் பட்டர் நம்பிள்ளை போல்வாருடைய சில இதிஹாஸங்களை நாம் கேட்கும்போதும் புத்தகங்களில் வாசிக்கும்போதும் 'உண்மையாக இங்ஙனே நடந்திருக்குமோ!' என்று அதிசங்கிககுமவர்களாக நாம் இருக்கின்றோமே தவிர, 'நாமும் அந்தநடையைச் சிறிதாகிலும் அநுகரிக்க முயலவேண்டும்' என்று பாரிக்கிற அதிகாரிகள் இலரென்றே சொல்லவேண்டும்.

ஸ்ரீவசநபூஷணத்தில் "குற்றம் செய்தவர்கள் பக்கல் பொறையும் க்ருபையும் சிரிப்பும் உகப்பும் உபகாரஸ்ம்ருதியும் நடக்கவேணும்" என்றவிடத்து ஜநந்யா சார்யருடைய வியாக்கியானமான ஆய்ப்படியில்—"பட்டர் ஒரு நாள் பெருமாள் ஸந்நிதியிலே அநுஸந்தானம் பண்ணுநிற்க, சிலர்செவி பொறுக்கவொண்ணுத பருஷோக்திகள் பண்ணக்கேட்டு, சாத்தின திருவாழிமோதிரத்தையும் திருப்பரியட்டத்தையும் கொடுத்தருளி, முதலிகளைப் பார்த்து, இவர்கள் பருஷித்ததுக்கு நான் அஞ்சிக் கொடுத்தேனன்று; நாமறியாத தோஷங்களையும் பெருமாள் திருச்செவி சாத்தும்படி சொன்ன உபகாரத்தைப் பற்றக் கொடுத்தேனத்தனை என்றருளிச் செய்தார்" என்று.

## திவ்யப்ரபந்த திவ்யார்த்தாநுபவப் பகுதி

"தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல்
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல் நன்று செய்தாரென்பர்போலும்
மன்னுடைய விபீடணற்காய் மதிளிலங்கைத்திசைநோக்கி மலர்கண்வைத்த
என்னுடைய திருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவரே

(பெரியாழ்வார் திருமொழி 4—9—2)

திருமகள் கொழுநனை எம்பெருமான் தான் பரமகாருணிகனுயிருக்கச் செய்தேயும் அவரவர்கள் செய்யும் பிழைகளுக்குத் தக்கபடி தண்டிக்கின்றவனுயுமிருக்கையாலே அடிபணிந்தவர்களும் தம் தம் அபராதங்களுக்குத் தகுந்தவாறு பிராயச்சித்தங்களைச் செய்துகொண்டாலல்லது அவர்களைத் திருவுள்ளம் பற்றுவதில்லை

வென்று விரதங்கொண்டிருப்பன். அப்போது "ஸஹதர்மசரீம் சௌரேஸ் ஸம்மந்த்ரித ஜகத்தீநாம். அநுக்ரஹமயீம் வந்தே நித்யம் அஜ்ஞாதநிக்ரஹாம்". என்கிறபடியே அநுக்ரஹமே வடிவெடுத்தவளும் நிக்ரஹமென்பதை ஒருபோது மறியாதவளுமான நம்மன்னை ஸ்ரீ மஹாலக்ஷ்மியானவள் "கிமேதந் நிர்தோஷ: க இஹ ஜகதீதி த்வமுசிதைரு பாயைர் விஸ்மார்ய ஸ்வஜநயஸி மாதா ததஸி ந:" [ஸ்ரீகுணரத்நகோசே] என்கிறபடியே புருஷகார க்ருத்யத்தைச் செய்து அபராதி சேதநர்களையும் 'இவர்கள் அணுகிவந்தார்களே' என்பதுவே காரணமாக எம்பெருமானோடு கூட்டுகிறாள். அப்படிப்பட்ட புருஷகார பலத்தாலே தலையெடுக்குங்குணங்களையுடையனான ஸர்வேச்வரனும் அந்த சேதநர்களைத் திடமாகத் திருவுள்ளம் பற்றுகிறான். பிறகு பிராட்டியானவள் "இந்த ஆர்த்ராபராதி சேதநர்களை நமது கணவன் திருவுள்ளம் பற்றினவிது நம்முடைய நிர்ப்பந்தத்திற்காகவேயா? அல்லது தன்னுடைய திடமான அன்பினாலேயா?" என்று பரீக்ஷிக்கப் பார்க்கிறாள். தன்னுடைய நிர்ப்பந்தத்தாலே ஸ்வீகரித்ததாகில் ஒருகால் இவர்களைக் கைவிட்டு விடவுங்கூடும். அப்படியல்லாமல் நிஜமான அன்பினால் ஸ்வீகரித்ததாகில் ஒருநாளும் கைவிட நேராது. ஆகவே, இந்த பரீக்ஷை அவசியமென்று தோன்றிப் பிராட்டி, தானே புருஷகாரம் செய்து கூட்டிவைத்த சேதநர்கள் விஷயமாகவே சில குற்றங்களை யெடுத்துரைக்கத் தொடங்குகிறாள்;

(பிராட்டி) 'நாதா! நான் ஏதோ ப்ரமித்து இவர்களுக்காக உம்மிடம் சிபார்சு செய்து மன்றாடிச் சேர்ப்பித்தேன்; பிறகு ஆராய்ந்து பார்த்தவளவில் இவர்கள் அளவு கடந்து அஸஹ்யாபராதங்களைச் செய்தவர்களென்று நன்றாய்த் தெரிய வருகின்றது. ஆகையாலிவர்களைக் கைக்கொள்ளாது தள்ளி விடுவதே நலமென்று தோனறுகிறது' என்கிறாள்

எம்பெருமான் அதுகேட்டு மறுமொழி கூறுகின்றான்—'பிராட்டியே! இவர்கள் உன்னடியார்களாயிருந்த போது ஒருகால் குற்றங்களைச் செய்திருக்கக்கூடும்; என்னடியார் களான பின்பு ஒரு போதும் குற்றஞ்செய்யார்கள்' என்று.

பிராட்டி இதுகேட்டு "நாதா! நீர் உண்மையை க்ரஹிக்கவில்லை. இவர்கள் குற்றமே வடிவெடுத்தவர்கள்; ஒரு க்ஷணகாலமும் இவர்களால் குற்றம் செய்யாதிருக்கமுடியாது. நீர் சிறிது விமர்சித்துப் பார்க்கவேணும்; குற்றத்திற்குத் தக்கபடி தண்டனை செய்தேயாகவேண்டும்' என கிறாள்.

அப்போது எம்பெருமான் கூறுகின்றான்—'என்னடியார் குற்றஞ்செய்யார்களென்று நான் திண்ணமாகவெண்ணுகிறேன். குற்றவாளர்களே யிவர்கள் என்னில் குற்றத்தையே நற்றமாகக் கொள்ளுகிறேன் போ-என்று.

இப்படி பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஒரு ஸம்வாதம் நிகழ்ந்ததாக வைத்துப் பெரியாழ்வார் பாசுரம் பாடியுள்ளார். இந்த ஸமவாதத்தினால் எம்பெருமானுடைய வாத்ஸல்யாதிசயமும் அப்ரகம்ப்யமான பக்தாநுக்ரஹ மஹிமையும் ப்ரகாசப்படுத்தப்பட்டனவாகின்றன. தோஷங்களிலும் குணத்வபுத்தியே வாத்ஸல்ய மென்று

பூர்வாசார்யர்கள் நிர்ணயித்தார்கள். இந்த நிர்ணயத்தை ச்ருத ப்ரகாசிகாசார்யர் சரணாகதிகத்ய வ்யாக்கியானத்திலும் ஸ்ரீ பாஷ்ய ச்ருதப்ரகாசிகையிலும் ஸ்பஷ்டமாக அநுக்ரஹித்திருக்கிறார். அஃதிருக்கட்டும்.

அவரவர்களின் அபராதங்களுக்குத் தக்கபடி தண்டிக்குமியல்வினனான எம்பெருமான் சில ஸமயங்களில் சிலர் திறத்தில் "செய்தாரேல் நன்று செய்தார்" என்று அருளிச்செய்கிறானென்று ஆப்ததமரான ஓராழ்வார் அருளிச்செய்திருப்பது அபலிக்கமுடியாமலிருக்கின்றது. பெருமாளுக்கும் பிராட்டிக்கும் இப்படி யொரு ஸம்பாஷணை நடந்தபோது ஆழ்வார் கேட்டுக்கொண்டிருந்தாரோவொன்று இவரே கற்பனையாகக் கட்டுகிற கதைதானேயிது என்றும் சிலர் சொல்லுவதுண்டு. அவர்களுக்கு நாம் இரண்டுவிதமாக பதில் சொல்லுகிறோம். ***தந் ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி*** என்று வரங்கொண்ட வான்மீகி முனிவரிற் காட்டிலும் அதிசயித்த வரம் பெற்ற ஆழ்வார்கள் உள்ளது உள்ளபடியே வெளியிடுவார்களே யொழியக் கற்பனையாக அணுவளவும் சொல்லார்கள். அருளிச்செயல்களில் விச்வாஸமில்லாதவர்களுக்கு நாம் இங்கே பதில் சொல்ல அவசியமில்லை—என்பதாக ஒரு ஸமாதானம். (2) பிராட்டிக்கும் பெருமாளுக்கும் உண்மையாக இப்படி யொரு ஸம்பாஷணை நடந்ததில்லை; ஆழ்வார் தாமே கற்பனை செய்த ஸம்வாதமேயிது என்று கொண்டாலும் குறையில்லை, இப்படி யொரு ஸம்பாஷணையையிட்டுப் பேசுகிற ஆழ்வாருடைய திருவுள்ளம் என்னவென்று பார்க்கவேணும். நிஷ்ப்ரயோஜநமாகவா ஒன்று பேசி வைப்பராழ்வார்? திவ்ய தம்பதிகளுக்கு ஒரு ஸம்பாஷணை நடந்ததாகத் தாமே கல்பனை செய்தாலும் அதிலிருந்து ஒரு சாஸ்த்ரார்த்தத்தை வெளியிட்டருளக் கருதினாராழ்வார் என்று இசைந்து தீரவேண்டுமே. அந்த சாஸ்த்ரார்த்தம் எது? என்று கண்டறிதல் வேண்டும்.

இப்பாசுரத்தின் முதலடியில் தாமரையாள் சிதகுரைத்ததாகச் சொல்லி, மேல் இரண்டாமடியில் எம்பெருமானுடைய வார்த்தைகளை இரண்டு வகையாக வைத்திருக்கிறார். 'என்னடியார் அது செய்யார்' என்பது முதல் வார்த்தை; 'செய்தாரேல் நன்று செய்தார்' என்பது இரண்டாம் வார்த்தை. இவ்விரண்டு வார்த்தைகள் ஏதுக்கு? தாமரையாள் சிதகுரைத்தவுடனே எம்பெருமான் 'என்னடியார் செய்தது எனக்கு நன்றே' என்று ஒரே வார்த்தையாகச் சொல்லி முடித்திருக்கலாமே என்று. இதை அவசியம் விமர்ச்சிக்கவேணும்.

விமர்சிப்போம்: இரண்டு வார்த்தைகளின்றிக்கே ஒரே வார்த்தையாக முடிந்திருக்குமாயின் சாஸ்த்ரார்த்த க்ஷேபமுண்டாகிவிடும். பக்தர்கள் செய்யும் பாபங்களெல்லாம் நியமேந எம்பெருமானுக்கு போக்யமாகி விடுவதாய் ஒரு அபஸித்தாந்தம் செய்ய ப்ராப்தமாகும் 'என்னடியார் அது செய்யார்' என்கிற முதல் வார்த்தையானது பகவத் பக்தர்கள் பாபஞ்செய்யக் கூசியே வர்த்திக்க வேணுமென்று தெரிவிக்கவே தோன்றியது. ப்ராமாதிகமாகவோ அகதிகமாகவோ தோஷங்கள் செய்ய நேர்ந்துவிட்டால் அவற்றில் தனக்குதோஷபுத்தியுண்டாகாதென்று தன் குண விசேஷத்தையும் காட்டவேண்டி இரண்டாவது வார்த்தையாக 'செய்தாரேல் நன்று செய்தார்' என்பது நிபந்திக்கப்பட்டது. ஆக இப்படிப்பட்ட இரண்டு சாஸ்த்ரார்த்

தங்களையும் ப்ரகாசப்படுத்துவதே திவ்ய தம்பதிகளின் ஸம்பாஷணையாக வைத்த இந்தப் பாசுரத்திற்கு முழுநோக்கு. இதுவன்று எனின், வேறு எது? என்பதை ப்ராமாணிகமார்க்கத்திற் பேசவேண்டும்.

''நன்று செய்தாரென்பர்'' என்று நிறுத்தாமல் ''என்பர் போலும்'' என்று சொல்லி வைத்திருக்கையாலே வஸ்து வ்ருத்தியில் நன்றன்று என்றதாகத் தேறி விட்டதாய்ச் சிலர் கருதுகின்றார்கள். இது தமிழ் மரியாதைக்குச் சிறிதும் இணங்கியதன்று. ''அணியார் வீதியழுந்தூர் எந்தை பெருமானார் மருவி நின்ற ஊர் போலும்'' [பெரிய திருமொழி 7-5-1] என்று திருமங்கையாழ்வாரருளிச்செய்கிறார். இங்கு 'ஊர்போலும்' என்கையாலே வஸ்து வ்ருத்தியில் ஊரன்று எங்கிற வியாக்கியானமே பிறர் செய்யவேண்டியதாகும். போலும் என்றவிது (என்பர்) என்றதோடு சேர்ந்திராமல் (நன்று) என்றதோடாவது சேர்ந்திருந்தால் ஒருவேளை இவர்கள் சொல்லும் அர்த்தத்திற்கு இடமிருக்கலாம். ஆழ்வாருடைய ப்ரயோகம் அப்படியில்லை. போலுமென்பது * என்பரோடு சேர்ந்திருக்கையாலே, நன்று செய்தாரென்று பெரிய பெருமாள் சொல்லவில்லை என்பதாக ஒருவாறு பொருள் கூறவேண்டும். அப்படியே கூறுகிறோமென்னில் தன்னடியார் திறத்தகத்துச் சிதகுரைத்த தாமரையாள் எந்த அபிப்பிராயத்தோடு சிதகுரைத்தாள்; அடியார்களை எம்பெருமான் உதறித் தள்ளிவிட வேணுமென்கிற அபிப்ராயங்கொண்டா சிதகுரைத்தாள்? அதற்கு ப்ரஸக்தியில்லையே. எம்பெருமான் பக்கலிலிருந்து ரஸகனமான வார்த்தை வெளிவருமென்றும் அதைச் செவிகுளிரக் கேட்கவேணுமென்றும் பாரித்தன்றோ சிதகுரைத்தது. 'என்னடியார் செய்தது தப்புத்தான்' என்று எம்பெருமான் சொல்லிவிட்டதாகவே வைத்துக் கொள்வோம். பிறகு அந்த அடியார்களின் கதி என்னாயிற்றென்று கேட்க நேருமே. ப்ராயச்சித்தம் செய்து கொண்டு வாருங்கள் என்று சொல்லி உதறித்தள்ளிவிட்டானா? அல்லது, சித்திரகுத்தன் சுருணையிலேறிய சூழ்வினை கட்டுத்தக்கபடி நரகவேதனைகளை யநுபவிக்குமாறு சொல்லித் துரத்தி விட்டானா? என்று கேட்க வேண்டிவரும். இத்தகைய வினாக்களும், இவற்றுக்கு வெளிவரக் கூடிய விடைகளும் மிக விரஸமேயாகும். ஆழ்வார் திருவுள்ளமுவந்து அநுபவித்த திருக்குணத்தை ரஸித்துப் பேசியுய்வோம். இப்பாசுரத்தின் பின்னடியில் *மன்னுடையவிபீடணற்காய்* என்று ஸ்ரீ விபீஷணாழ்வானுக்கருள் செய்த செய்தியை நினைப்பூட்டியிருக்கையாலே, அடுத்தபடி அதை விவரிக்கும் முகத்தால் 'செய்தாரேல் நன்று செய்தார்' என்றதன் பொருளுண்மையை நிலை நாட்டுவோம். ஸ்ரீராமாயணரஸ விசேஷாநுபவப்பகுதி காண்க. ... ... *

# நமது நைச்யாநுஸந்தானத்தின் உண்மை

நமக்கு நைச்யாநுஸந்தானம் ஸ்வரூபம் என்றறிந்து நாம் ''நீசனேன் நிறையொன்றுமிலேன்'' என்றும் ''சீலமில்லாச் சிறியன்'' என்றும் பலவாறு பாசுரங்களையும் ச்லோகங்களையும் முன்னிட்டுத் தாழ்வு சொல்லிக் கொள்ளுகிறோம். நம் வாயினால் வெளிவந்த அந்தத் தாழ்வுதன்னையே பிறரொருவர் நம்மை நோக்கி எடுத்

துரைக்கத் தொடங்கினால் 'என்னையா நீசனென்கிறாய்? என்னையா நிறையொன்று மில்லாதவனென்கிறாய்? என்னையா சீலமில்லாச் சிறியனென்கிறாய்? பாவி! நீயன்றோ இப்படிப்பட்டவன்' என்று உடனே அவரை ஆயிரம் வகையாக தூஷிக்கவும் தண்டிக்கவும் தண்டிப்பிக்கவும் எழுகின்றோம். ஒவ்வொருவரும் தம்தம் அனுபவத்தில் இதை நிச்சயமாகக் காணலாம். சில விசேஷ காலங்களில் பெரியார்களை எழுந்தருளப்பண்ணி 'ஸ்வாமிந்! ஸ்ரீபாததீர்த்தம் ஸாதிக்கவேணும்' என்று வேண்டுகிறோம். அதற்கு அவர்கள் 'ஐயோ! அடியேனுக்கென்ன யோக்யதையுண்டு? ஸகல விதத்திலும் அயோக்யனன்றோ அடியேன்' என்று பலபடியாக நிகர்ஷாநுஸந்தானம் பண்ணுகிறார்கள். இந்த அநுஸந்தானம் உள்ளவாறு செய்கிறபடியா? அல்லது இங்ஙனே சொல்லிக் கொள்ளவேண்டுவது ஒரு உபசார வழக்கு என்று கொண்டு செய்கிறபடியா? என்று நாம் ஆலோசித்தால், அவர்களுடைய ஹ்ருதயத்தை நம்மால் தெரிந்துகொள்ளமுடியாதாயினும், அவர்கள் தாங்கள் அநுஸந்தித்த நீசத்தன்மையை நம் வாயினால் சொல்லிக்காட்டினவிடத்தும், (அதாவது நீர் மிகவும் அயோக்யர் என்று பிறர் சொன்னவிடத்திலும்) அவர்கள் உகந்தேயிருப்பர்களாயின் அப்போதுதான் அவர்களுடைய நைச்யாநுஸந்தானத்தை நாம் ஸஹ்ருதயமென்று நினைக்கலாகும்.

'அஹம் அமர்யாத:, அஹம் க்ஷுத்ர:' என்று நைச்யாநுஸந்தானம் பண்ணுமவர்கள் "த்வம் அமர்யாத: த்வம் க்ஷுத்ர:" என்கிற பரோக்திகளை உகந்திருக்கின்றார்களா? என்றே நாம் பார்க்கவேண்டும். கூரத்தாழ்வான் போல்வாரான சிலரே அங்ஙனமிருந்தார்கள் என்று சொல்லவேண்டியதாகின்றது. தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷோக்திகளைச் சிறிதும் ஸஹியாமல் உடனே பிரபலமாக ப்ரதிஸத்காரம் செய்யப் புறப்படுமவர்கள் தாங்கள் செய்துகொள்ளும் நிகர்ஷாநுஸந்தானம் அர்த்தமற்றது என்றே சொல்லவேண்டும்.

"ஒருவன் உன்னை இடது தாடையில் அறைந்தானாகில் உடனே அவனுக்கு நீ வலது தாடையை ஆதரவோடு காட்டு" என்று பிரசங்க மேடைகளில் பேசுவாரை மிக மிகக் காண்கிறோம். அப்படி அவர்கள் பேசி இப்பால் வந்தவுடனே அவரை ஒருவர் அடிப்பதாகக் கை யோங்கும்போதே என்ன நடக்கிறதென்பதையும் காணுநின்றோம்.

ஸபைகளில் சிலர் உபந்யாஸம் பண்ணி முடிக்கும்போது "ஒன்றுமறியாத நான் ஏதோ தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்; இதில் நல்லது ஒன்று கூட இராது; சிறியேனை க்ஷமிக்கவேணும்" என்று கால்மணி காலம் சொல்லி முடிப்பர்கள். இதே வார்த்தையை அவர் அயலார் வாயில் கேட்பாராகில், கோபாவேசங் கொண்டு கண்கள் சிவக்கப்பெற்று "எனக்கா ஒன்றும தெரியாது, நானா தப்பும் தவறுமாக உளறிவிட்டேன்" என்று ஆரம்பித்து (அவரே) பிரபலமாக அட்டஹாஸங்களைச் செய்யக் காண்கின்றோம். ஆசார்ய பீடம் வஹிக்கின்ற எந்த வ்யக்தியும் தம் நிகர்ஷத்தைத் தாம் அநுஸந்திக்கிறவர்களாக இருக்கின்றார்களே யல்லது, தம்மைப் பற்றிப் பிறர் கூறும் நிகர்ஷத்தை ஆமோதிப்பவர்களாக இல்லையே? அப்படியிருப்பவர்களன்றோ ஸ்ரீ வைஷ்ணவத்வ பூர்த்தி யுடையவராவார்.

இக்காலத்தில் இப்படிப்பட்ட வ்யக்தி தேறுவது கஷ்டமாதலால் ஒருவரும் ஸ்ரீவைஷ்ணவரல்லர் என்று நாம் சொல்லவும் நினைக்கவும் தகாது. 'ப்ராஹ்மண்யாம் ப்ராஹ்மணாத் ஜாதத்வம் ப்ராஹ்மண்யம்' [ப்ராஹ்மண யோநியில் பிறப்பதே ப்ராஹ்மண்யம்] என்று சொல்லுவதுபோல, 'வைஷ்ணவ்யாம் வைஷ்ணவாத் ஜாதத்வம் வைஷ்ணவத்வம்' [வைஷ்ணவயோனியில் பிறப்பதே ஸ்ரீவைஷ்ணவத்வம்] என்று சொல்ல ப்ராப்தமாகிறது.

அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களுடையவும் திருவுள்ளம் புண்படாதபடி வர்த்திக்கவேண்டியது நமது கடமையே யாகும். ஒரு வைஷ்ணவருடைய திருவுள்ளம் கன்றினால் அதிற்காட்டிலும் அநர்த்தபீஜம் நமக்கு வேறில்லை என்கிற துணிவு பிறக்கவேணும். ... ... ... ... *

# மஹாகவிவாக்கின் சுவைகாட்டும் பகுதி

சில மஹான்களை சதுர்தச வித்யாபாரங்கதர்களென்று கொண்டாடுவதுண்டு. பதினான்கு வித்யைகளில் கைதேர்ந்தவர்கள் என்பது இதன் கருத்து. பதினான்கு வித்யைகள் எவையென்னில், நான்கு வேதங்களுக்கும் அங்கமாக அமைந்த ஆறும், உபாங்கமாக அமைந்த எட்டுங் கூடிப் பதினான்கு என்கிறது. சீக்ஷாவ்யாகரணாதிகளான ஆறங்கங்களும், மீமாம்ஸாந்யாய புராண தர்மசாஸ்த்ராதிகளான எட்டு உபாங்கங்களும் ப்ரஸித்தமானவை. இப்பதினான்கு வித்யைகளில் வல்லவர்களைச் சதுர்தசவித்யாபாரங்கதர்களென்று சொல்லுகிறோம். இங்ஙனே அர்த்தங் கொள்வது தவிர மற்றொரு விதம் நைஷதகாவியம் முதல் ஸர்க்கத்தில் ஸ்ரீ ஹர்ஷ மஹாகவியினால் காட்டப்பட்டிருக்கின்றது. *அதீதிபோதாசரண ப்ரசாரணை:* என்கிற சுலோகம் காண்க. அதைச் சிறிது விவரிக்கிறோம். (சதுர்தச) என்பதற்கு நான்கோடேகூடிய பத்து என்று பொருள் கொள்ளுமளவில் பதினான்கென்று தேறுகிறது. அப்படியன்றிக்கே, "சதஸ்ரோ தசா: யாஸாம்; தா: வித்யா: சதுர்தசவித்யா:" என்று கொள்ளுமளவில் 'நான்கு அவஸ்தைகளையுடைய வித்யைகள், என்று பொருள்தேறும். வித்யைகளுக்கு நான்கு அவஸ்தைகள் யாவை யென்னில்; வாசிக்கப்படுதல், அறியப்படுதல், அறிந்தபடியே அநுஷ்டிக்கப்படுதல், தாம் அநுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அநுஷ்டிக்கச் செய்யப்பெறுதல் ஆகிய இவையாம்.

வித்யைகளை ஏடுபார்த்து உணருகை யன்றிக்கே குருமுகமாகக் கேட்கை அத்யயனம் செய்வது; இது, முதல் அவஸ்தை. வாசிப்பவர்களெல்லோரும் விஷயம் தெரிந்துகொள்ளுகிறார்களென்பதில்லாமையாலே சிரமப்பட்டுப் படித்து விஷயங்களும் தெரிந்துகொள்ளப்பெறுதல் இரண்டாமவஸ்தை. தெரிந்துகொள்வதற்கு ப்ரயோஜனம் அனுஷ்டானமே யாதலால் தெரிந்துகொள்வதோடு நில்லாமல் அனுஷ்டானமும் செய்யப் பெறுகை மூன்றும் அவஸ்தை. தான் அனுஷ்டிப்பதோடு நில்லாமல் பிறரையும் அனுஷ்டிப்பிக்கப் பெறுவது நான்காமவஸ்தை. ஆக இப்படிப்பட்ட சதுர்வித தசைகளையுடைய வித்யைகள்—சதுர்தசவித்யைகள். இப்படி ரஸனமானவொரு நிர்வாஹத்தைக் காட்டின ஸ்ரீ ஹர்ஷமஹாகவியின் மேதை மெச்சத் தகுந்தது. ... ... ... ... *



—...—

# ஸ்ரீ ராமாயணரஸ விசேஷாநுபவப்பகுதி

சிறு குறிப்பு:— சென்ற புரட்டாசி யிதழில் நிகமாந்த மஹா குரு திவ்யஸூக்தி யநுபவம அவகாச மின்மையால் விட்டுப்போயிற்று; அக் குறை தீர இந்த ஸ்ரீ ராமாயணப்பகுதியை தேசிக திவ்யஸூக்திகொண்டு அமைக்கின்றேன்.

நிகமாந்தமஹாகுரு பணித்த அபயப்ரதானஸாரத்தில் சரண்யசீலப்ரகாச மென்கிற ஐந்தாமதிகாரத்தில் பெருமாள் விபீஷணாழ்வானைப் பரிக்ரஹிக்கும் விஷயமாகத் தாம் அபூர்வமான வொரு அபிப்ராயத்தை வெளியிட்டதாக வேதாந்த குரு அற்புதமாகப் பணித்தருளினது கேளீர். "பரிவாலே கலங்கின அங்கத சரப ஜாம்பவத் ப்ரப்ருதிகளான முதலிகள் சில ஹேத்வாபாஸங்களை ஹேதுக்களாகக் கொண்டு விபீஷண பரிக்ரஹத்தைக் கடுக இசையாதொழிய, தத்வவித்தான திருவடி அவர்கள் சொன்ன ஹேத்வாபாஸங்களை யெல்லாம் ப்ரதிக்ஷேபித்து ஸுபரீக்ஷிதங்களான நிர்தோஷ குணங்களாலே ஸ்ரீவிபீஷணாழ்வான் பரிக்ராஹ்யனென்று விண்ணப்பம் செய்தான். அவ்வளவில் பெருமாள், சரணாகதனை நலியச் சொல்லுவார் திரளிலே இவன் பரிக்ராஹ்யனென்று சொல்லுவாரையும் பெற்றோமேயென்று திருவுள்ளமுகந்து 'அத ராம: ப்ரஸந்நாத்மா ச்ருத்வா வாயுஸுதஸ்ய ஹ. ப்ரத்யபாஷத துர்தர்ஷ: ச்ருதவாந் ஆத்மநி ஸ்திதம்' என்கிறபடியே அகம்பநீயமான ஸ்வமதத்தை அருளிச் செய்யத் தொடங்கினார்; விபீஷணன் ஸதோஷனாகையாலே அபரிக்ராஹ்யனென்ற அங்கதாதிமதங்களுக்கும், இவன் நிர்தோஷனாகையாலே பரிக்ராஹ்யன் என்கிற திருவடிமதத்துக்கும் விருத்தமாக ஸதோஷனேயாகிலும் சரணாகதனென்று பேரிட்டு வந்தவன் பரிக்ராஹ்யனென்று தானருளிச்செய்யப் புகுகிற மதம் அவ்வோலகத்தில் ஸர்வ விருத்தமாகையாலே இத்தை யெல்லாருங்கூட அநாதரிப்பர்களென்று பார்த்தருளி 'மமாபி து விவக்ஷாஸ்தி காசித் ப்ரதி விபீஷணம், ச்ரோதுமிச்சாமி தத் ஸர்வம் பவத்பி; ச்ரேயஸி ஸ்திதை:' என்று, நம்முடைய மதத்தை நாமும் சொல்ல நினையாநின்றோம், அதினுடைய அநுஷ்டானம் பின்பு பார்த்துக் கொள்ளுகிறோம், நமக்குப் பரிவரான நீங்கள் நாம் சொல்லுகிற வாக்யத்தை விபீஷணனுடைய சரணாகதி வாக்யம் பட்டதுபடுத்தி அநாதரியாதே கேட்டுத்தரவேணுமென்று இரந்தருளினார்"—ஆக இத்தனையும் வேதாந்தவாசிரியருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகள். மேலேயுமுள்ள பங்க்திகளை ஸ்ரீகோசத்திலே ஸேவித்துக்கொள்வது.

ஸ்ரீராமாயணமோதினரெல்லாருமறிந்திருப்பது இரண்டே மதம்; விபீஷணன் துஷ்டனாகையாலே சேர்த்துக்கொள்ளத் தகாதவன் என்கிற (ஸுக்ரீவாதிகளின்) மதமொன்றும், இவன் அதுஷ்டனாகையாலே சேர்த்துக்கொள்ளத்தக்கவன் என்கிற (திருவடியின்) மதமொன்றுமாக இரண்டு மதங்களுக்குமேல் மூன்றாவது மதமொன்று இருப்பதாக யாருமறிந்ததில்லை. பெருமாள் ஸுக்ரீவாதி மதத்தைத் தள்ளி ஹநுமந்மதத்தை யாதரித்து விபீஷணாழ்வானைப் பரிக்ரஹித்தருளினரென்றும் சொல்லிவருகிறோம். மேலே விவரித்த இரண்டு மதங்களையும் கண்டித்துவிட்டார் பெருமாள் என்று ஸ்வாமி தேசிகன் ஆழ்ந்து அறிந்து அழகாக வெளியிட்டிருப்பது அவருடைய தார்க்கிக ஸிம்ஹத்வத்தை நிலைநாட்டுகின்றது.

தார்க்கிகர்கள் பிரதிவாதிகளின் வாதங்களைக் கண்டிக்கும்போது சிலவிடங்களில் ஹேதுவைக் கண்டிப்பர்கள்; சிலவிடங்களில் ஸாத்யத்தைக் கண்டிப்பர்கள்; இந்த ரீதியில் சக்ரவர்த்தி திருமகன் ஸுக்ரீவாதிவாதத்தில் ஸாத்யத்தைக் கண்டித்தார்; மாருதிவாதத்தில் ஹேதுவைக் கண்டித்தார். ஸுக்ரீவாதிகளுக்கு ஸாத்யம் (விபீஷணனுடைய) அபரிக்ராஹ்யத்வம்; அதை மட்டும் கண்டித்தார். துஷ்டனுகையாலேயென்கிற ஹேதுவைக் கண்டிக்கவில்லை. மாருதிக்கு ஸாத்யம் (விபீஷணனுடைய) பரிக்ராஹ்யத்வம்; அதைக் கண்டிக்கவில்லை. அதுஷ்டனுகையாலே என்கிற ஹேதுவை மட்டும் கண்டித்தார்.

| ஸுக்ரீவாதி மதம்: | மாருதி மதம்: | ஸ்ரீராம மதம்: |
|---|---|---|
| விபீஷணன் துஷ்டனுகையாலே கொள்ளத் தகாதவன் | விபீஷணன் அதுஷ்டனுகையாலே கொள்ளத் தக்கவன் | துஷ்டனுகையாலே கொள்ளத் தக்கவன். |

ஆக வெவ்வேறுபட்ட மூன்று மதங்கள் தேறிவிட்டன. தோஷமே பச்சையாக ஸ்வீகரிப்பதைத் தன்னேற்றமாகக் கொண்டவர் பெருமாள் என்று தேறிற்று. இதனுல் *செய்தாரேல் நன்று செய்தார்* என்பது வ்யாக்க்யாதமாயிற்று. "சரணுகதனுகையாலே பரிக்ராஹ்யன்" என்பதே ஸ்ரீராமனுடைய மூன்ருவதான மதம் என்பது அஸங்கதம். அவனுடைய சரணுகதத்வத்தை ஸுக்ரீவாதிகளும் க்ஷேபிக்கவில்லையே இதி ஸம்க்ஷேப:.

# எங்களுக்கு டாக்டரின் அபேக்ஷையேயில்லை

ஒருவர் டாக்டர் படிப்பு படித்து உயர்பதவியில் தேறினுர். L.M.P, M.B.B.S முதலான பட்டங்களெல்லாவற்றுக்கும் மேலான பட்டம் பெற்ருர். பிறகு செய்ய வேண்டியதென்ன? ப்ராக்டிஸ்செய்து பொருளீட்ட வேண்டியதுதானே. அதற்கு வழிதேடினுர். ஸமீபத்தில் தனிகர்கள் வாழும்படியான ஒரு பெரிய அக்ரஹாரம் சென்று அங்கு ஒரு வீட்டில் தங்கி, தம்முடைய சிகித்ஸைத் திறமையை விளம்பரப் படுத்தினுர். வீட்டுவாசலில் பெரிய போர்டு பலகைகள் மாட்டிவைத்தார். "இவ்வூரில் பெரிய டாக்டர் இனனுர் வந்திருக்கிருர்; இன்னதெருவில் இன்ன கதவிலக்கமுள்ள வீட்டில் தங்கியிருக்கிருர்" என்று வீதிதோறும் பறைசாற்றச் செய்தார். ஏழைகளுக்கு இலவசமாக சிகித்ஸை செய்வதாகவும் விளம்பரப்படுத்தினுர். மாசம் இரண்டாயிற்று. ஒரு சிறு பையன்கூட சிகித்ஸைக்கென்று வரவில்லை. அதனுல் இவ்வூரில் வேறு டாக்டர்கள் இருக்கிருர்களோவென்று அவர்க்கு ஐயமுண்டாயிற்று. ஆங்காங்கு மூலை முடுக்குகளிற் சென்று விசாரிக்கச் செய்தார். வைத்தியரொருவரும் கிடையாதென்று திண்ணமாகத் தெரிந்துகொண்டார். இவர்க்கோ மிக வியப்பு உண்டாயிற்று. இவ்வளவு பெரிய ஊரில் ஒருவர்க்காவது வயிற்றுவலி தலைவலி கூடவா வராமலிருக்கும்; டாக்டரை நாடாமலிருப்பது எப்படி ஸம்பாவிதமாகும்? என்று ஆச்சரியப்பட்டார். அக்கம்பக்கத்தில் சில வைத்தியர்கள் இருக்கக்கூடுமென்றும், அவர்களிடம் சென்று சிகித்ஸைபெற்று வரக்கூடுமென்றும் எண்ணிப் பார்த்தார். அதைப்பற்றியும் விசாரணைசெய்து பார்த்ததில் 'இவ்வூருக்கு யோஜனை தூரத்தளவும் ஒரு வைத்யரும் கிடையாது' என்று தெரியவந்தது.

பிறகு இதன் மருமத்தைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்று ருசி பிறந்து, தானே அவரவர்களின் வீடுகளிற் சென்று நான் ஒரு பெரிய டாக்டர்; இவ்வூரில் ப்ராக்டிஸ் பண்ணவந்து இரண்டு மாதங்களுக்கு மேலாயிற்று; இதுவரை ஒருவர்கூட என்னிடம் ஒரு சிறிய சிகித்ஸைக்கும் வரவில்லையே, என்ன காரணம்? இவ்வளவு பெரியவூரில் ஒருவர்க்குமேயா நோய்நொடி வராமலிருக்கும்? என்ன விஷயம்?, என்று கேட்டார். அதற்கு எல்லாரும் ஏககண்டமாக ஒரேவிதமான பதில் சொன்னார்கள். (அதாவது) "டாக்டரே! எங்களுக்கு டாக்டரின் அபேக்ஷையே யில்லை; இவ்வூரில் எங்களுக்கெல்லாம் ஒரு பெரிய குரு இருக்கிறார்; அவரிடத்தில் நாங்கள் உபதேசம் பெறுகிறவர்கள்; அந்தவுபதேசத்தின்படியே நடந்துகொண்டும் வருகிறோம்; அதனால் எங்களுக்கு ஒரு நோயும் வருவதுகிடையாது. ஆகவே எங்களுக்கு சிகித்ஸாபேக்ஷையே நேருவதில்லை" என்றார்கள். இங்ஙனம் சொல்லக்கேட்ட டாக்டர் "அது எவ்விதமான உபதேசம்? நான் அதைத்தெரிந்துகொள்ளலாமோ?" என்ன; ஆகா, நன்றாகத் தெரிந்துகொள்ளலாமென்று கூறி அதைத் தெரிவித்தார்கள்; "தினமிரண்டு; வாரமிரண்டு; பக்ஷமிரண்டு; மாஸமிரண்டு; ருது இரண்டு; அயனமிரண்டு; வருஷமிரண்டு—இதுதான் உபதேசம்" என்றார்கள். டாக்டருக்கு இது சிறிதும் விளங்கவில்லை. பிறகு 'இந்த ஸூத்ரங்களை நீங்களே விவரிக்க வேணும்' என்று அவர்களை வேண்டிக்கொள்ள அவர்களே விவரித்தார்கள். (அது மேலே வருமாறு—)

**தினமிரண்டு**=போஜனமென்பது தோன்றின போதெல்லாம் செய்யலாகாது. "ருதம் த்வா ஸத்யேந பரிஷிஞ்சாமீதி ஸாயம் பரிஷிஞ்சதி, ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதி ப்ராத:" என்று மந்த்ரமோதின இரண்டுவேளை மட்டுமே போஜனம் செய்யவேண்டும்; இடைப்பலஹாரம், கடைப்பலஹாரம் என்பது எதுவும் கூடாது. இதுதான் தினமிரண்டு என்றதன் கருத்து. போஜனமும் நித்திரையுமாகிற விரண்டும் வ்யவஸ்திதமாயிருக்கவேணு மென்பதையும் இதற்குக் கருத்தாகக் கொள்ளலாம். **வாரமிரண்டு**=வாரத்தில் இரண்டு நாளாவது ஆலயஞ்சென்று தொழுது வரவேண்டும்; இதனால் தினப்படி சென்று தொழக்கூடாதென்பதில்லை. இரண்டுநாள் தவறவே கூடாதென்றபடி. **பக்ஷமிரண்டு**=இரண்டுவாரங் கூடினால் ஒரு பக்ஷமாகிறது. வாரந்தோறும் ஒரு அப்யஞ்ஜநம் [எண்ணெய் தேய்த்துக்கொள்வது] தவறலாகாதென்றபடி. **மாஸமிரண்டு**=இரண்டு பக்ஷங்கள் கூடினால் ஒரு மாஸமாகிறது; ஏகாதசிதோறும் உபவாஸம் தவறலாகாதென்றபடி. **ருது இரண்டு**=இரண்டு மாதங்கள் கூடினால் ஒரு ருதுவாகிறது. 'மாஸி மாஸி க்ஷுரகர்ம கர்த்தவ்யம்' என்றபடி மாதத்திற்கொருமுறை வபனம் செய்வித்துக்கொள்ள வேண்டு மென்றவாறு. இதுவும் தேஹாரோக்யத்தில் சேர்ந்த காரியமேயன்றோ. **அயனமிரண்டு**=ஆறுமாதங்கள் சேர்ந்தால் ஓர் அயனமாகிறது. மூன்று மாதங்களுக்கொருமுறை விரேசனம் கொள்ளவேணு மென்றபடி. **ஸம்வத்ஸரமிரண்டு**=சிலர் நித்யம் தேசாடனமே செய்துகொண்டிருப்பர்; சிலர் ஒருநாளும் ஊரைவிட்டுக் கிளம்பாமலே யிருப்பர் இரண்டும் பிசகு. ஆறுமாதத்திற் கொருமுறை திவ்யதேச சேவையையோ சிஷ்யாநுக்ரஹத்தையோ வியாஜமாகக் கொண்டு சிலநாள் வெளி ஸஞ்சாரமும் செய்துவரவேண்டுமென்றபடி ஆக இந்த நியமங்களை விரதமாகக் கொண்டிருப்பவர்களுக்கு நோய்நொடி வாராது; வைத்யாபேக்ஷையிராது என்றதாயிற்று. இந்த ஸதுபதேசம் அவ்வூரில் ஸபலமாயிருப்பதுகண்டு இங்கு நம்மால் ஜீவிக்க இயலாதென்று வெளியேறிவிட்டார் டாக்டர். ... ... ... ... ...

*

# மாலோல வித்வத்ஸதஸ்ஸில் சித்ரகவித்வ விஜ்ஞாபனம்.

(பத்ராதிபர்: *P. B. A.*)

ஸ்ரீ காஞ்சியில் ஸ்ரீமத் பரமஹம்ஸ. அழகியசிங்கர் திருமுன்பே நிகழ்த்திய சித்ரகவிதையுபந்யாஸத்தின் சுருக்கம் வருமாறு ;—சுலோகங்கள் இரண்டு; முதல் சுலோகம் ஸ்ரக்தரா வ்ருத்தம். இரண்டாவது சுலோகம் - சார்தூல விக்ரீடித வ்ருத்தம். இரண்டு சுலோகங்களும் முத்ராலங்கார ரீதியில் இயற்றப்பட்டவை. "𑌸𑍂𑌚𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍂𑌚𑌨𑌂 𑌮𑍁𑌦𑍍𑌰𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌪𑌰𑍈𑌃 𑌪𑌦𑍈𑌃" [ஸூச்யார்த்த ஸூசநம் முத்ரா ப்ரக்ருதார்த்தபரை: பதை:] என்பது முத்ராலங்கார லக்ஷணம். ப்ரக்ருதமான அர்த்தம் ஒன்று; ஸூசிப்பிக்கப்பட வேண்டிய அர்த்தம் வேறொன்று. இரண்டுக்கும் அநுகூலமாகப் பதங்களை விந்யஸிப்பதால் சித்ரகவித்வமாகும். ஸ்ரீ அழகிய சிங்கருடைய திருவவதார நக்ஷத்திரம் ஆவணி ஹஸ்தம். அன்று 1975 என்கிற லக்கங்கொண்ட வருஷமும் 9 லக்கங்கொண்ட மாதமும், 8 லக்கங் கொண்ட தேதியுமுள்ளது. இந்த லக்கங்களைத் தெரிவிக்கும் பதங்களை அடைவே இட்டுத் தேவப்பெருமாள் பெருமையை அநுபவிப்பது முதல் சுலோகத்தில் பூர்வார்த்தம். அதில் உத்தரார்த்தமானது அந்த லக்கங்களையே வ்யுத்க்ரமேண அமைத்து ஸ்ரீ அழகியசிங்கருடைய பிரபாவங்களை வருணிப்பது.

இரண்டாவது சுலோகமானது (வைதிகரீதியில்) ஸ்ரீ ஸ்வாமியின் ஷஷ்டிபூர்த்தி ஷேக நன்னாளில் கூடுகின்ற ராக்ஷஸ வருஷம் தக்ஷிணாயநம் வர்ஷர்த்து ஸிம்ஹ மாஸம் சுக்லபக்ஷம் த்ருதீயாதிதி திங்கட்கிழமை ஹஸ்த நக்ஷத்திரம் என்கிற இவற்றைக் காட்டும் பதங்களையிட்டு ஸ்ரீ அழகியசிங்கருடைய பெருமைகளை வருணிப்பதாகும். இனி அடைவே இரண்டு சுலோகங்களையும் விஜ்ஞாபித்துப் பொருளும் விவரிக்கப்படுகிறது.

> 𑌏𑌕𑍋 𑌦𑍇𑌵𑌾𑌧𑌿𑌦𑍇𑌵𑍋 𑌨𑌵𑌨𑌵𑌸𑍁𑌷𑌮𑌃 𑌸𑌪𑍍𑌤𑌸𑌪𑍍𑌤𑍇𑌰𑍍𑌵𑌿𑌜𑍇𑌤𑌾
> 𑌪𑌞𑍍𑌚𑌸𑍍𑌥𑌿𑌤𑍍𑌯𑌾𑌢𑍍𑌯𑌰𑍂𑌪𑍋 𑌨𑌵 [illegible] 𑌦𑍋𑌷𑌾 [illegible] ।
> [illegible] 𑌪𑌞𑍍𑌚𑌾𑌸𑍍𑌯𑌯𑍋𑌗𑍀 [illegible]
> 𑌏𑌕𑌾𑌕𑍀 [illegible] ॥

(பொருள் விவரணம்.) * ஏகோ தேவாதிதேவோ நவநவஸுஷம: ஸப்தஸப்தேர் விஜேதா பஞ்ச ஸ்தித்யாட்யரூப: * ; என்னுமிவ்வளவால் 1975 என்கிற வருஷ லக்கம் ஸூசிப்பிக்கப்படுவதை ஷப்த ஸந்நிவேஷத்தில் ஸ்பஷ்டமாகக் காணலாம். இது 𑌸𑍂𑌚𑍍𑌯𑌾𑌰𑍍𑌥𑌸𑍂𑌚𑌨𑌂. இனி 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌾𑌰𑍍𑌥𑌂 கேளீர். [𑌏𑌕𑌃—ஏக:] * ஒன்றே புகலென்று உணர்ந்தவர் காட்டத்திருவருளால், அன்றே அடைக்கலங் கொண்ட நம் அத்திகிரித்திருமால் * என்றும், * 𑌏𑌕𑌂 [illegible] । [illegible] * என்றுமுள்ள ஸ்ரீ ஸூக்திகளின் படியும், * 𑌏𑌕𑌮𑍇𑌵𑌾𑌦𑍍𑌵𑌿𑌤𑍀𑌯𑌮𑍍 * 𑌏𑌕𑍋 𑌹 𑌵𑍈 𑌨𑌾𑌰𑌾𑌯𑌣 𑌆𑌸𑍀𑌤𑍍 * இத்யாத்யுபநிஷத்வசனப்படியும் அத்விதீய தத்வமாயிருப்பவா. அவர் யாரென்னில்,

[தேவாதிதேவ:] தேவபபெருமாள். * மனிசர்க்குத் தேவர் போலத் தேவர்க்கும் தேவாவோ! * என்கிற திருவாய்மொழிப் பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. (1975 என்கிற வருஷ லக்கததில் (1) என்னும் லக்கம் இதில் ஸூசிதம்). [நவநவ வர்ஷ:] * எப்பொழுதும் நாள் திங்கள் ஆண்டுழி யூழிதொறும் அப்பொழுதைக் கப்பொழுதென்னாராவமுதமே * என்கிற திருவாய்மொழிப்படியும், * காமம் ஸஹம ராஜஹஸ்தி நாதொஸிகாஸிஷ அபிநவாபிநவ ந்தாம் ஸ்ரீமந்மஹீ தயாநிதி * என்கிற தேசிக ஸூக்திப்படியும் க்ஷணே க்ஷணே புதிது புதிதாகத் தோன்றும் ஶோபையை யுடையவர். அந்யாம் (அந்யாம்) என்றது—நவம்நவமான என்றபடி. * வருஷா வஸாநமஸோஹா * என்பது அமரகோஶம். இதில் (நவ) என்பதால் ஶப்தஶக்தியினல் 9 லக்கம் ஸூசிதம். [ஸப்தஸப்தேர் விஜேதா—ஸப்த ஸப்தேர் விஜேதா] * த்வத்தேஜஸி தீவ்ர பிரதிமெனமவதெ! விதேஷெ ப்ராவைத்த ஸந்த்யவஸ்வ ஸஹஸ்ராம்ஶு * என்கிற வரதராஜ பஞ்சாஶத் ஸூக்தியின் அரும்பெரும் பொருளை இங்கு உணரவேணும். (அதாவது)–தேவப்பெருமாளே! உம்முடைய தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால் ஸூர்யனிற்காட்டிலும் அமாவாஸ்யை எற்றமடைந்ததாகும்—என்பது பொருள். இதன் கருத்தென்னென்னில், ஸூர்யன் தான் ஒரு தேஜஸ்பதார்த்தமாயிருக்கை யாலே தேஜஸ்ஸு விஷயத்தில் தேவப்பெருமாளோடு ஸ்பர்த்தை கொண்டு ஹம்ஸ மடைந்து நிற்கிறன்; அமாவாஸ்யையானது தன்னிடம் தேஜஸ்ஸு லவலேஶமு மில்லாமையாலே தேவப்பெருமாளோடு ஸ்பர்த்திக்கவோ ஹம்ஸமடையவோ ஆஸக்தியில்லை. ஆகவே அமாவாஸ்யைக்கு ஏற்றம். ஹம்ஸ ஆஸக்தியில்லாமை யாலே. (இதை அடியேன் ஸதஸ்ஸில் உபந்யஸிக்கும்போது இது எல்லார் மனத் திலும் நன்கு பதிவதற்காக ஒரு த்ருஷ்டாந்தம் காட்டினேன். (அதாவது) இந்த மஹாஸதஸ்ஸில் வித்வான்களென்றுபேர்பெற்றவர்களுமுள்ளார்கள்வருகிறார்கள். அடியோடு கல்வி கற்காதவர்களுமுள்ளார்கள். வித்வான்களென்று பேர் சுமப் பவர்கள் ஏதோ சொல்லத் தொடங்கி அழகியசிங்கருடைய மறுப்புரைகளாலே ஹம்ஸமடைந்து போகிறார்கள். மற்றையோர்கள் [யதாஜாதர்கள்] வாய்திறக்கவும் ஆஸக்தியில்லை, ஹம்ஸமடையவும் ஆஸக்தியில்லை. அதனால் அவர்களுக்கு ஏற்ற முண்டன்றே—என்று.] இதில் ஸப்த என்று ஏழு லக்கம் ஸூசிதமாயிற்று. * காரார்புரவியேழ்பூண்ட தனியாழித், தேரார் நிறைகதிரோன் * என்ற கலியன் பாசுரப்படி ஸூர்யன் ஏழு குதிரைகளையுடையவனாகையாலே அவன் ஸப்தஸப்தி யென்று பேர்பெற்றான். (ஸப்தி—குதிரை).

[பஞ்சஸ்தித்யாட்யரூப:–பஞ்சஸ்தித்யாட்யரூப:] தேவப் பெருமான் *பரோவா வ்யூஹோவா விபவ உத ஸார்சாவதாரோ ஹவந்வா ஜயதீ * என்கிற வரதராஜ ஸ்தவ ஸூக்திப்படியும் * விண்மீதிருப்பாய் மலைமேல் நிற்பாய் கடல் சேர்ப்பாய், மண்மீதுழல்வாய் இவற்றுளெங்கும் மறைந்துறைவாய் * என்கிற திருவாய் மொழிப்படியும் பாவ்யூஹவிபவ அந்தர்யாமி அர்ச்சைகளாகிற ஐந்து நிலைமை களோடு கூடியவர். இதில் 5 லக்கம் ஸூசிதம். ஆக 1975 என்கிற லக்கங்கள் ஸூசிதங்களாயின.

இனி மாத லக்கம் (9) ஸூசிதமாகவேணும். ஸெப்டம்பர் மாதமன்றே. [நவகுருவிநுத:– நவகுருவிநுத:] தேவப் பெருமாளைப் பாடின ஆழ்வார்களும்

ஆசாரியர்களும் ஒன்பதின்மர். எங்ஙனேயென்னில்; * என்னெஞ்சமேயான்— உலகேத்துமாழியான் அத்தியூரான் * * அத்தியூரான்புள்ளை யூர்வான் * என்கிற இரண்டு பாசுரங்கள் பாடின பூதத்தாழ்வார்—1. * ஹயஶைலகெ விஷ்ஷ வரடிழ * என்ற தேசிக திவ்ய ஸூக்திப்படி *அயர்வறுமமரர்களதிபதியென்றும், *மணியை வானவர் கண்ணனை * என்றும் பாடின நம்மாழ்வார்—2. * வரந்தரும் மாமணி வண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி * என்று பாடின திருமங்கை யாழ்வார்—3. (ஆக ஆழ்வார்கள் மூவர்.) ஆசாரியர்கள் அறுவர்; (அவர்களா கிறர்—* யஸ்ய ஹஸ்திகஶயா..... தம் தெவதெவ வரதம் ஶரணம் ஜ்ரிதொஸ்மி * என்றருளிய ஆளவந்தார்—1. தேவராஜாஷ்டகமருளிய திருக்கச்சிநம்பிகள்—2. வரதராஜ ஸ்தவமருளிய கூரத்தாழ்வான்—3. * வரதஶஸ்தாரதீவ த்ஹஸ்ஜலொத ந ஸம்ஹநநம் ........ வரதம் ஹண தாதிஜஹரழ * என்றருளிய பட்டர்—4. வரத ராஜ பஞ்சாஶத் அருளிய ஸ்ரீ தேசிகன்—5. * ஶம்ஐம் வெயஸொ வெஷ்ஶெஷிதீஜ ஹ ... வரதாய தயாயாஜெ யீஶொதாராய ஶம்ஐழ * இத்யாதி மங்களாஶாஸநதஶக மருளிய மணமாளமாமுனிகள்—6. ஆகமொத்தம் ஒன்பதின்மர். இதில் 9 என்கிற மாதலக்கம் காண்க. இனி தேதி லக்கம் 8 வரவேணும், [அஷ்டார்த்த வக்த்ரார்ச்சித:— அஷ்டார்த்த வக்த்ரார்ச்சித:] எட்டில் பாதியான நான்கு முகங்களையுடையனை பிரமனால் அஶ்வமேத யாகத்தில் ஸாக்ஷாத்கரிக்கப்பெற்று ஆராதிக்கப்பட்டவர் தேவப்பெருமாள். * ... * இதில் அஷ்ட என்றது காண்க. ஆக வஶ்வஷாய த்தினால் 1975-9-8 என்கிற வருஷ மாத தேதி லக்கங்கள் ஸூசிப்பிக்கப்பட்டன. (அவ்யாத்-என்பது க்ரியாபதம். ரக்ஷித்தருள வேணுமென்கை.

இனி, உத்தரார்த்தம் ஸ்ரீ அழகியசிங்கர் பரமானது. மேலே காட்டிய லக்கங்களை வ்யுத்க்ரமேண இட்டுப் புகழ்வதாம். 1975 என்பதை 5791 என்று காட்டுவது காண்மின். [ரம்ய: பஞ்சாஸ்யயோகீ— ரம்ய: பஞ்சாஸ்ய யோகீ] ரம்ய:—அழகிய, பஞ்சாஸ்ய யோகீ] சிங்கர், அழகியசிங்கர். இதில் (பஞ்ச) என்று ஶப்த ஶக்தியினால் 5 லக்கம் ஸூசிதம். இதற்கு (ஜயதி) என்கிற க்ரியையில் அந்வயம்.

[ஸாரபித ஹ்ருதயஸ் ஸப்தபி:— ஸாரபிதஹ்ருதயஸ் ஸப்தபி:] ஸ்ரீ பாஷ்யத்தில் பக்தி ஸாதநங்களாகச் சொல்லப்பட்ட விவெக விமொகாப்யாஸ க்ரியாகல்யாண அநவஸாத அநுத்தர்ஷங்களென்கிற ஏழினால் நறுமணம் பூண்ட திருவுள்ளமுடையவர். இவ்வேழும் ஸதஸ்ஸில் விவரிக்கப்பட்டன. அநுஸம்தேயவ:. இதில் 7 லக்கம் கண்டது. இனி 9, 1, லக்கங்கள் வரவேணும் [தாநவாரௌ ஏகாந்தீ— தாநவாரௌ ஏகாந்தீ] * அமரர்க்கு இடர்கெட அசுரர்கட்கு இடர் செய்யும் லக்ஷ்மீ நிருஸிம்ஹன் பக்கலிலே ஐகாந்திகமான பக்தி பூண்டவர். இதில் (தாநவ) என்றதில் நவ என்பது ஶப்த ஶக்தியினால் 9 லக்கத்தைக் காட்டும். [ஏகாந்தீ] என்பதில் (1) லக்கம் ஸ்பஷ்டம். ஆக 1975 வருஷ லக்கமாயிற்று. [அஷ்டபக்த்யுஜ்ஜ்வல ஹ்ருத— அஷ்ட பக்த்யுஜவவ ஹ்ருத] ஸமவச் சாஸ்த்ரங்களில் நவவித பக்தியும் அஷ்டவித பக்தியும் விளக்கப்பட்டுள்ளன. திருமழிசைப்பிரான் திருச்சந்த விருத்தத்தில் * எட்டினாய பேதமோ டிறைஞ்சி நின்று * என்று அஷ்டவித பக்தியை ஆஸ்தா

விக்கிறுர். * ஊஷகஜநவாதஜூூம் வூஜாயாம் அாநுஜொடிநழ। ஹயசஹூஅ-உநம் ஜெவ ஊஷயெஉ ஸம்ஹவஜஉநழ ॥ உதயாஶவணெ ஸக்தி: ஹுஜநெதூாஜவிஉ யா। ஊாநுஸாண கிதூம் யஹுஊாம் நொவஜீவதி ॥ ஷக்திஷவியா ஹெஷா. என்னப்பட்ட அஷ்டவித பக்திகளிஞல் விளக்கமுற்ற திருவுள்ளமுடையவர் இதில் ஶதாபிஷேகத் தேதி லக்கமான (8) காணத்தக்கது. [அநவவி ஹாஜஜஷ: — அநவதி ப்ராஜ்ஞஜுஷ்ட:] எண்ணிறந்த வித்வான்ாளிஞல் புடை சூழப் பெற்றவர். இதில் (நவ) என்பது ஶப்த ஶக்தியிஞல் மாத லக்கமான (9) ஐக் காட்டிற்று. இத்தகைய பெருமை வாய்ந்த நம் அழகியசிங்கர் இங்குப் பொலிகின்றுர். ஆக இந்த ச்லோகத்தில் பூர்வார்த்தத்திஞல் தேவப்பெருமசள் பெருமையும். உத்தரார்த்தத்திஞல் அழகிய சிங்கரின் பெருமையும் அநுபவிக்கப்பட்டதானது ஆக்ருதம்; வருஷ மாஸ திவஸ லக்கங்கள் தெரிவிக்கப்பட்டதானது ஸூஅரூாயஉ ஸூவநம் .... .... *

(இரண்டாவது ச்லோகத்தின் அவதாரிகை.) வைதிகர்கள் ஹவ்யகவ்ய காலங்களில் (ஹுஹவாஷஷஷிஸம்வஹாஉயெூ) நாஉ ஸம்வஹரெ ... அயநெ.... ஐதெள... ஊாஸெ....வக்ஷெ....திதெள—வாஸரெ...நக்ஷத்ரெ என்று இத்தனையும் சொல்லுவர் கள். ஸ்ரீ அழகியசிங்கருடைய ஶதாஷிஷெகதிநத்தன்று சொல்லவேண்டியவை— ராக்ஷஸவர்ஷே, தக்ஷிணயநே, வஷஉதெஉள, ஸிம்ஹஊாஸெ, ஶுக்லவக்ஷெ, தருதீயாதி தெள, ஸொாவாஸரெ, ஹஸ்தநக்ஷத்ரெ என்பர்கள். இந்த எட்டும் அடைவே வரும் படியும் இதில் அழகியசிங்கர் பெருமை விளங்கும்படியும் அமைக்கப்பட்ட (சித்ர கவித்வ) ச்லோகம் வருமாறு;—

> ஆநஜொதாவஷஉஜொ நிரவவி ஸ்ரீ தக்ஷிணாவஷஉுக:
> வெதாணாதூிஹகெஸரீ ஸிதஉநா: ஜூூாநெ தநீயெ ஹரி: ।
> ஸொாஜொாஉஸாவவாஹதரூஹதிக: ஹஷூஸூஉுக்உஉஹாஜ
> ஜீயாஜெவெதவதம்ஸஜெஶிகஸஉாவெதூாஉஹொாஸிஜெஶொாயஸ ॥

(பொருள் விவரணம்). [ஆநஜொதாவஷஉத:—ஆநந்தோத்தா வர்ஷத:] (இதி லுள்ள விஶேஷணங்கலெல்லாம் நம் அழகியசிங்கருக்கு இடப்பட்டவை. ஒவ் வொன்றிலும் வர்ஷ அயநாதிகள் திருநக்ஷத்ர தினத்தன்று உள்ளவை ஸூசிப் பிக்கப்படுகின்றன. ராக்ஷஸ வருஷ மென்பதை நேராகக் காட்டாமல் ஆநந் தோத்தர வர்ஷமென்று காட்டியுள்ளது. ஆனந்தத்திற்கு உத்க்ருஷ்டமான வ்ருஷ்டியை யுண்டாக்கினவர் அழகியசிங்கர். பேரின்ப வெள்ளம் பெருகவன்றே ஸ்வாமி ஒவ்வொரு காரியமும் செய்தருளினது., உத்தரமென்பதும் உத்தமமென் பதும் பர்யாயம். *உதூஊாஊநஉ வரஷிம் தூவாஜ ॥ [நிரவவிஸ்ரீதக்ஷிணாவஷஉுக:— நிர வதி ஸ்ரீதக்ஷிணவர்ஷுக:] எல்லைகடந்த செல்வத்தை தக்ஷிணையாக வர்ஷித்தவர். பல லக்ஷக்கணக்கிலன்றே விநியோகித்தருளினது. இதில் தக்ஷிணயநமும் வர்ஷர்த்துவும் ஸூசிதம். [வெதாணாதூிஹகெஸரீ—வேதாந்தாத்ரிக கேஸரீ.] ஸ்ரீ ஸ்வாமியோ அழகியசிங்கர். சிங்கமோ மலைமுழஞ்சுகளில் வர்த்திக்கும். இந்த சிங்கம் வேதாந்த மலைகளிலே விளங்குமதாம். காடகத்தில் ஸாவிதொவாவூாநத் தில் * தப்ஹ ஸ்ரீநு ஸிரிஸவாஜ அவிஜூாதாதி தஶஉயாணகாஶ... வெதா வா வஜெத * என்றேதி ருப்பது காண்க. இதில் ஸிம்ஹமாஸம் ஸூசிதம். [ஸிதஉநா:— ஸித

மநா:] * [illegible] .... [illegible] * என்று ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் கூறியபடியே சுத்தமான திருவுள்ளம் படைத்தவர். * என்னை வெள்ளுயிராக்கவல்ல * என்ற திருப்பல்லாண்டு பாசுரமுங் காண்க. இதில் (ஸித) என்பதனால் சுக்ல பக்ஷம் ஸூசிதம் [[illegible] — ஜ்ஞாநே த்ருதீயோ ஹரி:] எம்பெருமான் செய்தருளின திருவவதாரங்களுள் மூன்றாவதான அவதாரம் வராஹாவதாரம் அப்பெருமானுக்கு ஞானப்பிரானென்று திருநாமம். * ஏனத்துருவாயிடந்த ஞானப்பிரான் * என்கிறார் திருவிருத்தத்தில் (99) நம்மாழ்வார். * ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்ட ஞானத்தினொளியுரு * (திருமொழி 2-6-3) என்கிறார் திருமங்கையாழ்வார். அப்பெருமான்போலவே அழகியசிங்கரும் ஞானப்பிரானாய் ஞானத்தினொளியுருவாய் விளங்குபவர். இதை அடியேன் ஸதஸ்ஸில் உபந்யஸிக்கும்போது ஸ்ரீ அழகியசிங்கர் "நான் இளமையில் ஜ்ஞான ஸம்பாதநார்த்தமாக ஸ்ரீ வராஹ க்ஷேத்ரமாகிய ஸ்ரீ முஷ்ணத்தில் சிலவாண்டுகள் வாழ்ந்ததுண்டு" என்று புன்னகையுடன் ஸாதித்தபடி. இதில் த்ருதீயா திதி ஸூசிதம்.

[[illegible] — ஸோமோஸௌ உபராக தூரகதிக:] யதிராஜ ஸப்ததியில் * அநபாய விஷ்ணு பத ஸம்ச்ரயம் பஜே...யதிராஜ சந்த்ரம் உபராக தூரகம் * என்றருளியதை அடியொற்றியது இந்த விசேஷணம். உபராகமென்று க்ரஹணத்திற்கும் பெயர், விஷயாநுராகத்திற்கும் பெயர். அழகியசிங்கர் விலக்ஷண சந்திரன் என்றவாறு. இதில் ஸோமவாரம் ஸூசிதம். [[illegible] — ஹஸ்தஸ்தமுக்தி:] *வைகுந்தமாநகர் மற்றது கையதுவே * என்கிறபடியே முக்தியைத் தம் கைப்பாடாகவுடையவர். தேசிகன் வரதராஜ பஞ்சாசத்தில் * [illegible] ! [illegible] ! [illegible] * என்று பணித்தபடியும், * வைகுந்தமாகும் தம்மூரெல்லாம் * என்று ஆழ்வாரருளிச் செய்தபடியும் * இங்கே காண இப்பிறப்பே மகிழச் செய்பவர் நம் அழகியசிங்கர் என்பது கருத்து. இதில் ஹஸ்த நக்ஷத்ரம் ஸூசிதம்.

[[illegible] — அஸௌ வேதவதம்ஸ தேசிகஸமாக்ய: அஹோபிலேச: யமீ ஜீயாத்] இங்கு எழுந்தருளிய நின்ற வண்சடகோப ஸ்ரீவேதாந்ததேசிக அஹோபிலமடாதிபதி ஸ்ரீ ஸ்வாமி வாழி வாழியே. இதை ஸதஸ்ஸில் விண்ணப்பஞ் செய்தபோது நான்காவது பாதம் வேறு விதமாக இருந்தது. ஸதஸ்ஸிலிருந்த ஸ்ரீ. உ. வே. உத்தமூர் வீரராகவாசாரியர் ஸ்வாமியும் மற்றுஞ் சில வித்வான்களும் "வர்த்தமாந அழகிய சிங்கரின் அஸாதாரணத் திருநாமம் ச்லோகத்தில் காணவில்லையே" என்று சிறு குறையொன்று கூற, பிறகு * [illegible] * என்று அமைத்து விஜ்ஞாபித்தேன். ... .... ....

— நித்யஸ்ரீர் நித்யமங்களம். —

குறிப்பு—* லக்ஷ்மீநேத்ரோத்பல ஸ்ரீச்லோகோபந்யாஸ விவரணம் அடுத்த இதழில் வரும்.

(ஸ்ரீ ந்ருஸிம்ஹப்ரியாவில்)

# "வேண்டாம் விவாதர்" என்றது மிகமிக மெச்சத்தக்க வார்த்தையே.

(பத்ராதிபர், P. B. A)

அடியேனுக்கு அடிக்கடி ஸ்ரீமத் பரமஹம்ஸ இஞ்சிமேட்டழகிய சிங்கரின் நினைவே வருகின்றது. அடியேனுடைய உபந்யாஸங்களில் பெரும்பாலும் அந்த மஹானுடைய குணவிசேஷங்களைப் பரக்கப்பேசுவதுண்டு. சில ஸமயங்களில் கண்ணநீரும் பெருகும். அந்த ஸ்வாமி பூர்வாச்ரமத்தில் அடியேனுடைய வீதியில் அதிஸந்நிஹிதராக எழுந்தருளியிருந்தபடியால் ஐந்தாறு வருஷகாலம் நெருங்கிய பழக்கமிருந்தது. அக்காலங்களை அடிக்கடி நினைப்பேன். கண்ணீர் பெருக நிற்பேன். ஒருஸமயம் அஸ்மதாசார்யரான (வைகுண்டவாஸி) ஜகத்குரு ஸ்ரீகாதி ஸ்வாமி தமது திருமாளிகையில் ஐந்துநாள் ஒரு வித்வத் ஸதஸ்ஸு நடத்தியருளினார். வித்வான்களுக்கு ஸன்மானம் செய்யவேணுமென்றே அந்த ஸதஸ்ஸை நடத்தினர். அப்போது இஞ்சிமேட்டழகிய சிங்கர் க்ருஹஸ்தராய் ரங்கநாதாசார்ய ஸ்வாமி யென்னும் திருநர்மத்தோடு எழுந்தருளியிருக்கிறார். ஸ்ரீகாதி ஸ்வாமியின் வித்வத்ஸதஸ்ஸுக்கு நடுநாயகமாக வீற்றிருந்தார். பெங்களூர் ப்ராந்தத்திலிருந்து ஸ்ரீமத் நெக்குஹள்ளி திருமலாசாரியர் ஸ்வாமி யென்கிற ஒரு மஹா வித்வானும் ஸதஸ்ஸுக்கு எழுந்தருளியிருந்தார். அப்போது அவர்க்கு எண்பது பிராயமிருக்கும். அவர் நியாய பாஸ்கரத்தில் ஒருவிஷயம் ப்ரஸ்தாவித்தார். அதைக் கேட்ட இஞ்சிமேட்டு ஸ்வாமி "விஷயதத்வம் இப்படியில்லையே" என்று ம்ருதுவாக ஸாதித்தார். அதற்கு அவர் "உமக்குத் தெரியாது" என்றார். இஞ்சிமேட்டு ஸ்வாமி உடனே எழுந்து விரைந்து சென்றார். சீற்றங்கொண்டு செல்லுகிறாரென்று பலரும் நினைக்கலாயிருந்தது. சீற்றம் சிறிதுமில்லை. திருமாளிகைக்கெழுந்தருளிப் பூர்வமீமாம்ஸா க்ரந்தமொன்றை யெடுத்துக்கொண்டு ஐந்தாவது நிமிஷத்தில் மீண்டு வந்து சேர்ந்தார். அந்த க்ரந்தத்தில் ஓரிடத்தை யெடுத்து ஸதஸ்ஸில் வாசித்தார். உடனே நெக்குஹள்ளி ஸ்வாமி 'ஸமாஹிதோஸ்மி' என்றார். "பராஜிதோஸ்மி" என்று ஸாதிக்கவேணுமென்றார் அங்கிருந்த ஒரு பண்டிதர். அது கேட்ட இஞ்சிமேட்டு ஸ்வாமி அப்போது ஸாதித்தருளின வார்த்தை நேற்று போலிருக்கிறது அதி விநயபேசலமாக ஸ்மயமாநமுகாம்போஜராய் ஸாதித்த வார்த்தைகளின் ஆநுபூர்வி இப்போது நினைவுக்கு வரவில்லை. "திருவுள்ளம் ப்ரஸந்நமானால் போதும், ஜிதோஸ்மி யென்று எதற்காக ஸாதிக்கவேணும்? இது யுத்த பூமியா என்ன? * வையயஞ: வாவூரமன்றோ" இத்யாதியாக ஸாதித்ததை ஸதஸ்ஸிலிருந்த பல வித்வான்களும் மெச்சினர்கள்.

அந்த ஸ்வாமி ஆச்ரமஸ்வீகாரம் செய்தருள்வதற்கு முந்தின நாள்வரையில் ப்ராத காலத்தில் வெள்ளக்குளம் செல்லும்போது நியமேந இருவோமும் சேர்ந்தே செல்வோம். (திரும்புகாலில் சேர்த்திநேராது.) போகும்போது ஏதாவது

அர்ச்சைகள் நேர்ந்துகொண்டேயிருக்கும். ஒருநாள் கைவல்யவிஷயமான வார்த்தைகள் நடந்தன. அப்போது ஸாதித்தார்; "திருப்பதியில் புரிசை ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி ஸன்னிதியில் நான் வாசிக்கும்போதுதான் அந்த ஸ்வாமி கார்யாதிகாரணவாதம் எழுதினதும் அச்சிட்டதும்; சிறிய விஷயம் பெரிய விஷயமாய்விட்டது" என்று. மேன்மேலும் தொடர்ந்து சில வார்த்தைகள் நடத்தன. அப்போது அடியேன் கைவல்யவிஷயமாக ஸம்க்ஷேபேண ஒருவியாஸமெழுதி (இஞ்சிமேட்டு ஸ்வாமி ஸன்னிதியில் ஸமர்ப்பித்தேன். கடாக்ஷித்தருளிக் கொடுத்தனுப்பி விட்டார். மறுநாள் காலை ஸந்தித்தபோதும் அந்த ப்ரஸ்தாவமே செய்தருளவில்லை. சில நாட்களுக்குப் பிறகு அதை அச்சிட்டும் வெளியிட்டேன். ஒருமுறையல்ல, இரண்டுமூன்று முறையும் அச்சிட்டிருக்கிறேன். ஸம்ஸ்க்ருதபாஷையிலும் அதையெழுதி வைதிக மனோஹராவில் அச்சிட்டிருக்கிறேன். லோகாசார்ய ஸித்தாந்த ஸார க்ரந்தத்தில அதை உலகமெல்லாம் வாசித்திருக்கிறது. தமிழில் எழுதியதை மட்டும் இதோ இங்கே எடுத்துக்காட்டுகிறேன். ஆச்ரமஸ்வீகாரமான பிறகு ஒருகால் கோயிலில் தசாவதாரப்பெருமாள் ஸன்னிதியில் தண்டன் ஸமர்ப்பிக்க விடைகொண்டபோது இந்த நிருபணங்களை வைதிக மனோஹராவில் கடாக்ஷித்தருளினதாகப் புன்முறுவலோடு ஸாதித்தருளினபடி. ப்ராமாணிகத்வத்திற்கு மிக மகிழ்ந்தேன்.

இது ஸம்பாவிதமா? என்று சிலர் ஶங்கிக்கக்கூடும். ஸ்ரீ ஸ்வாமி மனச்சாக்ஷியை மீருதவர் என்பதை இரண்டு விஷயங்களால் மூதலிக்கிறேன். ஸ்ரீமத் ரஹஸ்யத்ரய ஸாரத்தில் – த்வயத்தில் பூர்வ கண்டத்தில் யிராட்டிக்கு உபலக்ஷணத்வமா? விஶேஷணத்வமா? என்றொரு விசாரத்தைத் தோற்றுவித்து ஸ்வாமி தேசிகன் சில காரிகைகளும் இட்டருளியிருப்பது ப்ரஸித்தம். அவ்விடத்தில் இஞ்சிமேட்டழகிய சிங்கர் தாமருளிச் செய்து முத்ரணமும் செய்வித்தருளின ஸ்ரீஸாரபோதிநி யென்னும் வியாக்கியானத்தில் ஸித்தோபாயஶோதநாதிகாரத்தில் (ஸ்ரீ ஸ்வாமி பதிப்பில் இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 29ல் ஏழாவது வரி தொடங்கி ஸாதித்தருளியிருப்பதாவது–"இந்த விஶேஷணம் ஸ்வரூபலக்ஷணங்கள் தந்நிரூபகாரண ஸ்ரீபாஷ்யத்தில் சொல்லப்பட்டதுகள். இந்த உபலக்ஷணத்வத்தை ப்ரக்ருதத்தில் பிராட்டிவிஷயத்திலே ஏகதேஶிகளும் சொல்லுகிறார்களில்லை. சொல்லவும் முடியாது" என்று......இந்த ஸ்வாமிக்கு முன்னே எத்தனையோ பேர்கள் வியாக்கியானம் செய்திருக்கிறார்களே ஒருவராவது இந்த மருமம் கண்டறிந்ததுண்டோ?. ப்ராமாணிகஸரணி இதுவன்றோ?

மற்றொருவிஷயம். அதுதன்னிலேயே (த்வயாதிகாரத்தில் பக்கம் 335ல் பதினொன்காவது வரிமுதலாக *தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்* என்கிற சக்ரவர்த்தி திருமகன் திருவாக்கை விவரிக்குமிடத்து (ஸ்யாத்) "அப்யுபகமே லிங் தோஷமிருக்கக்கடவது; தோஷமில்லாதவனிடத்தில் தாம் தயயா செய்யவேண்டியது என்ன? என்று பாவம்" இதி. இது பெரிய விஷயமன்று; முந்தின விஷயம் மிகப் பெரிது; நிற்க. இனி கைவல்யவிஷயத்தில் இஞ்சிமேட்டழகியசிங்கரும் கடாக்ஷித்தருளின அடியேனது வியாஸம் வருமாறு;—

## கைவல்ய மோக்ஷத்தைப்பற்றி

கைவல்யமாவது ஸ்வாத்மாநுபவம். இதற்கொரு ஸ்தான விசேஷமுண்டு. அதுவும் மீட்சியில்லாத மோக்ஷமே யென்பது நம் ஆசாரியர்களின் ஸித்தாந்தம். இதை மோக்ஷமென்பது ஔபசாரிகமென்றும், மீட்சியுண்டென்றும் கூறுவாருமுளர். இவ்விவாதம் பூருவர்களின் காலத்தில் விசேஷமாக வளரவில்லை. பிற்காலத்தவர்கள் இதைப்பற்றி வெகு விரிவான க்ரந்த கோலாஹலங்களை வளர விட்டார்கள். ஸ்தோத்ரரத்நத்தில் நான்காம் ச்லோகத்தில் *மோக்ஷாபவர்கதுபாயமதீ* என்றவிடத்துக்கு வியாக்கியானஞ் செய்யுமிடத்து பெரியவாச்சான்பிள்ளைக்கும் தேசிகனுக்கும்அபிப்பிராயபேதம் விளைந்திருப்பதுண்டு கைவல்யாநுபவமென்னும் ஆத்மாநுபவத்தை அபவர்க்க பதத்திற்கு அர்த்தமாக வுரைத்தருளினர் பெரியவாச்சான்பிள்ளை; முந்தின மோக்ஷபதத்திற்கே அது அர்த்தமென்றார் தேசிகன்.

நியாய ஸித்தாஞ்ஜநத்திலே தேசிகன் இது விஷயமாகச் சில சொல்லிக்கொண்டு போம்போது ஸ்ரீ பாஷ்யஸூக்திகள் ஸ்வமதாநுகூலங்களென்றும் கீதாபாஷ்ய ஸூக்திகள் மாத்திரம் தம் கருத்துக்கு இணங்கவில்லை யென்றும் திருவுள்ளம்பற்றி *[illegible]* என்ற ஒரு வாக்கியத்தினால் கீதாபாஷ்ய ஸூக்திகளுக்கு அஸ்வாரஸ்யம் கல்பித்தருளினார். ஸ்ரீபாஷ்யஸூக்திகளையும் கீதாபாஷ்ய ஸூக்திகளையும் ஸமரஸமாக நிர்வஹிக்க இயலாமையாலே அந்யதரக்ரந்தத்திற்கு அஸ்வாரஸ்ய கல்பனம் அவர்ஜநீயம் என்று தேசிகனுடைய திருவுள்ளமாயிருந்தது. ஒன்றுக்கும் அஸ்வாரஸ்யம் கல்பிக்க வேண்டாமல் எல்லாம் நன்கு பொருந்துகிறபடியைப் பெரியார் நிரூபிக்கிறார்கள்; சுருக்கமாகக் கேண்மின்.

கீதாபாஷ்யத்தில் பஞ்சாக்நி வித்யாநிஷ்டனை கேவலனுக்கு *ப்ரஹ்மாத்மக ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூப உபாஸநத்தையும் ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபாவாப்திரூப பலத்தையும் அர்ச்சிராதி கதியினால் பரமபத ப்ரப்தியையும் புநராவ்ருத்தியில்லாமையையும் அருளிச்செய்துள்ளார். ஸ்ரீ பாஷ்யத்தில் *[illegible]* என்ற ஸூத்ர விவரணத்தில் — "[illegible]" என்றருளிச் செய்திருக்கையாலே கேவலனுக்கு ப்ரஹ்ம ப்ராபதியாகிற பலன் ஸ்ரீ பாஷ்யத்தில் சொல்லிற்றாகத் தேறுகின்றது. ஆகவே, ஆத்மஸ்வரூபாவாப்தியைப் பலனாகச் சொல்லுகிற கீதாபாஷ்யத்திற்கும், ப்ரஹ்மப்ராப்தியைப் பலனாகச் சொல்லுகிற ஸ்ரீ பாஷ்யத்திற்கும் பரஸ்பரவிரோதம் இருப்பதாகத் தோற்றும்.

இந்த விரோதத்தை விலக்க முயன்ற தேசிகன் மதுவித்யாந்யாயத்தை மனத்திலேகொண்டு ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தரபலனாகவும் ப்ரஹ்மாநுபவத்தை ப்ரதான பலமாகவும் கல்பித்து நிர்வஹித்தருளினார். இப்படி நிர்வஹிக்குமளவில் கீதாபாஷ்ய ஸூக்தியில் அஸ்வாரஸ்யம் ஏறுகின்றது. அவ்வளவேயல்ல; அவாந்தர பலனைக் கல்பிக்கவல்ல ப்ரமாணமும் துர்லபமாகின்றது; மதுவித்யாந்யாயம் இங்கே ஸுதராம் அப்ரஸக்தம்.

ஸ்ரீ ஸஹஸ்ர நாம பாஷ்யத்தில் "முக்தாநாம் பரமாகதி:" என்ற விடத்தில், [illegible] என்று
ட்டர் அருளிச் செய்ததும், வேதார்த்தஸங்க்ரஹதாத்பர்ய தீபிகையில் "[illegible]" என்று ச்ருத
ரகாசிகாபட்டர் அருளிச் செய்ததும் பழுதாயொழியும். ஒரு விரோதமும் வாராத
டி நிர்வஹிக்கும் வழி ஏதென்னில்;

ப்ரக்ருதிவியுக்த ஆத்மாநுபவமே கேவலனுக்கு ப்ரதானபலன்; கீதாபாஷ்
த்திலருளிச் செய்தவிதுவே ஸித்தாந்தம். ஆனல் ஸ்ரீ பாஷ்யத்தில் *[illegible]* என்று ப்ரஹ்ம ப்ராப்தியை ப்ரதிபாதித்திருப்பது விரோ
திக்கின்றதே யென்கிற சங்கை நிற்கின்றது. கேண்மின், விரோதமில்லை. அங்கு
அடுத்தபடியாகவே *[illegible]* என்றருளிச் செய்திருக்கிருர்; இங்கு தத்க்ரதுந்யாயத்தைக் காட்
டினதற்கேற்ப ப்ரஹ்மாத்மகஸ்வாத்மப்ராப்திதான் ப்ரஹ்மாத்மகஸ்வாத்மோபாஸ
னத்திற்கு ஏற்றதான பலனுகத்தேறும். ஆகவே விசேஷணதயா ப்ரஹ்மத்திற்கு
ப்ராப்யத்வம் தேறுகையாலே ப்ரஹ்மப்ராப்தி சொன்னது பொருந்தும். ப்ரதான
மாயிருக்கவேண்டிய ப்ரஹ்மாநுபவம் அப்ரதானமாகி, ஆத்மாநுபவமே ப்ரதான
மாய் நிற்கையாலே கைவல்ய மோக்ஷத்தை இழித்துக் கூறலாயிற்று.

இப்படி நிர்வஹிக்கில் ஸர்வம் ஸமஞ்ஜஸமாகிறது. இப்படியல்லாமல் ப்ரக்ருதி
வியுக்த ஆத்மாநுபவத்தை அவாந்தர பலனுகவும் ப்ரஹ்மாநுபவத்தை முக்கிய
பலனுகவும் கல்பிப்பது நிர்மூலமென்னுமளவே யல்ல, கீதாபாஷ்யஸூக்திக்கு
அஸ்வாரஸ்ய கல்பகமாகவும் முடிகின்றது. பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு [illegible] நாடியினுல் நிஷ்க்ரமணமும் அவாந்தர பலனுகிற ஒரு வ்யவதான மின்றிக்கே
பலனைப் பெறுவதென்கிற விஷயமும ச்ருதப்ரகாசிகையில் அருளிச் செய்யப்
பட்டிருக்கின்றது.

ஜாபகோபாக்யானத்தில் வ்யவஹிதமாய் பலன் ப்ராப்தமானதை இங்கு
திர்சனமாகக் கொள்ளவேண்டியதில்லை. ஜிஹ்வை வழியாக நிஷ்க்ரமணமானது
பற்றியே ஜாபகனுக்கு பரஹ்மகாய நிஷேவண ரூபமான வ்யவதானம் ஏற்பட்ட
தென்று உணரக்கடவது. [illegible] நாடியினுல் நிஷ்க்ரமண மடைகின்ற பஞ்சா
க்நிவித்யா நிஷ்டனுக்குப் பலனில் வ்யவதான முள்ளதாகக் கல்பிப்பது ப்ராமாணிக
மான வழியல்ல. ஆகவே கீதாபாஷ்யத்தில் அருளிச்செய்தபடி ப்ரக்ருதிவியுக்த
ஆத்மஸ்வரூபாவாப்தி ரூபமான பலனே கேவலனுக்கு நியதமாகவுள்ளது அது
தானும் ப்ரஹ்மாத்மக ஸ்வரத்மோபாஸநஸித்தமான பலனுன பின்பு விசேஷண
தயா ப்ரஹ்ம ப்ராப்தியுமுள்ளதாகையாலே ப்ரஹ்ம ப்ராப்தியாகிற பலனை யருளிச்
செய்த ஸ்ரீ பாஷ்யமும் அவிருத்தமாகிறதென்று கொள்க.

மஹாபாரதே மோக்ஷ தர்மத்தில் முந்நூற்றைம்பதா மத்யாயத்தில் "[illegible]

[illegible]*
என்கிற ச்லோகங்கள் ஆசிரியர்களால் எடுத்தாளப் படுகின்றன. இங்கு ஆத்ம ப்ராப்திகாமனேயும் ([illegible]) என்று சொல்லிற்று. ப்ரஹ்மாநுபவத்தை யிழந்தவன் என்கிற பொருளே இங்கு விவக்ஷிதம். ஆர்த்தன், அர்த்தார்த்தி, ஜிஜ்ஞாஸு என்கிற இம்மூவரும் வஸ்துத: எம்பெருமானே யநுபவிப்பதை யிழந்தவர்களாதலால் அதை யிட்டே "[illegible]" என்று சொல்லிற்று.

இதைப்பற்றி கீதாபாஷ்ய தாத்பர்ய சந்த்ரிகையில் தேசிகன் விமர்சித் தருளுகையில் * [illegible] * என்றருளிச் செய்துள்ளார். இது அஸ்வரஸ மென்பதைத் தாமே யுணர்ந்து ஸித்தாந்தமான அர்த்தத்தையும் அடுத்தபடியாக நிர்வாஹாந்தரமாய்த் தாமே யருளிச் செய்தார். * [illegible] * என்ற ஸ்ரீஸூக்தி காண்க, இவ்விஷயத்தில் இவ்வளவே போதுமென்று நிற்கிறோம்.

[illegible]
[illegible]

பூர்வாசார்ய க்ரந்தங்களில் திருக்குருகைப்பிரான் பிள்ளானுடைய (முக்தக) ஸ்ரீஸூக்திகள் சில உதாஹரிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று – "[illegible] மான [illegible] போலே அஹங்காரமிச்ரமான உபாயாந்தரம்" என்பது. இதை ஸ்வாமி தேசிகன் ஸ்ரீமத்ரஹஸ்த்ரயஸார – சரமச்லோகாதிகாரத்திலே கண்டித்தருளுகிறார். அந்த கண்டனத்தைப் பிறர்ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொள்ளக்கூடாதென்கிற திருவுள்ளத்தினால் ஸ்வாமி தமிழில் எழுதாமல் ▣ [illegible] ▣ என்றொரு காரிகையினால் [illegible] செய்தருளினார். ரஹஸ்யத்ரயஸாரத்திற்கு ஏழெட்டு ஸ்வாமிகள் வியாக்கியானம் செய்திருக்கிறார்களே; அவர்களில் ஒருவரும் இது பிள்ளான் ஸ்ரீஸூக்திக்குக் கண்டனமென்று எழுதவில்லை. தாங்களும் தெரிந்துகொள்ளவில்லை. (திருவஹீந்திரபுரம் சேட்லூர் நரஸிம்ஹாசாரியருட்பட.) இக்காலத்துக் காலக்ஷேப பரர்களும் "இது தென்னாசார்யர்களுடைய உக்திக்குக் கண்டனம்" என்று சொல்லிப் போருகிறார்கள். இங்கு இஞ்சிமேட்டழகியசிங்கர் ஒருவரே இது பிள்ளான்ஸ்ரீஸூக்திக்குக் கண்டனமென்பதைக் கூசாமல் ஒளிக்காமல் காட்டியருளினர். அவர்தம்முடைய [illegible]யில் இரண்டாவது ஸம்புடத்தில் பக்கம் 494ல் கடைசியில் [illegible] ▣ ஸ்ரீஸூக்தியைப் பூர்த்தியாக எழுதி "என்கிற பிள்ளான் வாக்கியத்தைக்கொண்டு" என்று வ்யக்தமாக எழுதியருளினர். கண்டனமன்றாகில், "பிள்ளான் இப்படி ஸாதித்திருக்கமாட்டார்" என்றோ, "அவருடைய வாக்கியத்திற்கு இன்னது தாத்பர்யம்" என்றோ எழுதியிருக்கவேண்டும். மூலகாரரும் எழுதவில்லை, [illegible] தாவுமெழுதவில்லை. இதனால் என்னதேறிற்று? பிள்ளான் ஸ்ரீஸூக்திக்கு இது மலுப்கபன்று தேறிற்று. இதை மற்றையோர்மறைத்துவைக்க, இஞ்சிமேட்டழகியசிங்கரொருவரே விளக்கியருளினது ப்ராமாணிகத்வத்திற்குத் திருவிளக்கன்றோ? ... ... ... ...

— —

# ரஜகப்ரிய தத்பத்நீ-ப்ரிய ராஸப பண்டித விவரணம்

இதே ஸஞ்சிகையில் கீழே பக்கம் 10ல் மாலோல வித்வத் ஸதஸ்ஸமாப்தி வியாஸத்தில் *ரஜகேத்யாதி பண்டித ப்ரஸ்தாவம் வந்திருக்கிறது. சென்றவிதழிலும் வந்திருக்கிறது. அந்தபண்டிதர் யாவரென்று ஆப்தர் சிலர் தெரிந்துகொள்ள விருப்புகிறுர்கள். தெரிவிக்கிறேன். கடந்த விச்வாவஸு வருடத்தில் (1965ல்) ஸ்ரீ ராமாநுஜன் இரண்டு மாதஸஞ்சிகைகளை ஒன்றுசேர்த்து வெளியிடநேர்ந்தது. (264, 265) அதில் "ஸ்ரீமதஹோபில விசேஷங்கள் பதினெட்டு" என்ற கட்டுரையில் (பக்கம் 59ல்) வெளியிட்டிருப்பதை இங்கு அநுவதிக்கிறேன்; அதனுல் நன்கு தெரியவரும்; அவரவர்கள் அந்த ஸஞ்சிகையையும் எடுத்துப் பார்க்கலாம்.

"ப்ரக்ருதரான நாராயணுசார்யருடைய பாஷைகளேயோ பரிபாஷைகளேயோ சிறிதநுபவிப்போம். இவருடைய வியாஸங்கள் இரண்டாதலால் இரண்டிலுமநுபவிப்போம். எழுதுகிறுரிவர் — "வண்ணுனுக்கு வண்ணுத்தியின் மேல் ஆசை; வண்ணுத்திக்கோ கழுதைமேல் ஆசை" என்று. பாமரர்கள் வழங்குவதும் அஸதஸ்யமுமான இந்த ஆபாணகத்தைக் கூசாமல் எழுதுகிறுர். இந்த த்ருஷ்டாந்தத்திற்கு எது தார்ஷ்டாந்திகமென்னில்; பெருமாளுக்கு ப்ரஹ்லாதனுடைய க்ஷேமத்தில் ஆசையாம். ப்ரஹ்லாதனுக்கு லோகக்ஷேமத்தில் ஆசையாம். தேசிகனுங்கூட ' அவ்யாத் த்ரீணி ஜகந்தி" என்கிறுராம். வண்ணுன் பெருமாள்; வண்ணுத்தி ப்ரஹ்லாதன். ஸகல லோகங்களும் கழுதை. இப்படியாக இவருடைய ஸ்ரீமச்சரீ திருவள்ளம். சில உபந்யாஸகர்கள் நிளைவுக்கு வருவதையெல்லாம் சொல்லி ஆசை தீருவதுபோல இவரும் நினைவுக்கு வருமதையெல்லாம் எழுதி ஆசைதீருகிறுர். ஒரு சாஸ்த்ரஜ்ஞன் எழுதுகிற எழுத்தா இது? 'எம்பெருமானுக்குப் பிராட்டிமேல் ஆசை. பிராட்டிக்குச் சேதநர்களின் மேலாசை' என்றிங்ஙனே எழுதத் தோன்றவில்லையே; ஒருகவி "ஆத்யந்தரஹிதம் லந்தே மத்வஸ்த்ரஸத்ருசம் ஹரிம்" என்றுரென்று ப்ரஸித்தமானது. இது ஸதஸ்யமும் சமத்காரசாலியுமான வார்த்தையாகையாலே இதற்கு ரஸிகர்கள் உகப்பர்கள் இந்த வண்ணுன் வண்ணுத்திகழுதைகதைக்கு இவர் தம்பியாவது உகப்பரா? *யாந்தி ந்யாயப்ரவ்ருத்தஸ்ய திர்யஞ்சோபி ஸஹாயதாம் அபந்தாநம் து கச்சந்தம் ஸோதரோபி விமுஞ்சதி* என்றுர் முராரீ மற்றேர் அரிய பெரிய விஷயமும் கேளீர்; நம் பகவத் ராமாநுஜர் அருளிச்செய்த சாரீரகமீமாம்ஸா பாஷ்யத்தை ஸ்ரீ பாஷ்யமென்றே நாம் வழங்கிவருவது போல எதிரிகளுங்கூட தூஷணர்த்தமான அநுவாதங்களிலும் ஸ்ரீபாஷ்யத்திலென்றே சொல்லுவதும்எழுதுவதுமாயிருக்கிறுர்கள். உண்மையில் இது ஸ்ரீபாஷ்யத்திற்கு ஓர் ஏற்றம். அஸ்மத்தர்சநார்த்த தூஷணமே போதுபோக்காயிருந்த அனந்தக்ருஷ்ண சாஸ்த்ரியார் இவ்விஷயத்தைத் தம்முடைய சில நூல்களில் தாமேயெழுதியுள்ளார்–'ஸ்ரீபாஷ்யத்திற்கு இதுவொரு பெருத்த பாக்கியம்' என்று (*அவசா: ப்ரதிபேதிரே* என்ற கணக்கில்) எழுதியுள்ளார். இதை அடியேன் சில நூல்களில் எடுத்துக்காட்டியுமிருக்கிறேன். இந்த நாராயணுசார்யர் அவசியமானல் அதை யநுவதித்தெழுதியிருந்தால் போதுமானது. எழுதுகிறுரிவர்—(வியாஸத்தின் ஆரம்பம்) "மாத்ரு காதகனுக்கும் கத்தியோங்கிய கை கனத்தால் அம்மா என்றே அழைக்க வேண்டும்படி தாயுறவு உள்ளதென்பர்; அதுபோல் கண்டனம் செய்யப் புகுந்தவருங்கூட 'ஸ்ரீபாஷ்யத்தில் குறிப்பிட்ட விஷயம் தவறு' என்றே ஸ்ரீயுடன் கூட்டி கௌரவந்தோற்றச் சொல்லுவர்" என்று. இது மிகவும் அசடு தட்டிய வார்த்தை. "மாத்ருகாதகனுக்கும்

சைசலித்தால் அம்மேயென்ன ப்ராப்தியுண்டிறே" என்பது பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தி. ஒருவன் தௌராத்ம்யத்தாலே பெற்றதாயை ப்ரஹரிக்கிறான்; அப்போது கைநொந்தால் அம்மடீயென்கிறான். இதனால் ந்ருசம்ஸனான மகனுக்கும் தாய் பக்கலிலே ப்ரேமம் தவிர்க்கவொண்ணாததென்று தேறும். மேலேகுறித்த ஸூக்தியை எங்கேயோ அரைகுறையாகக் கேட்டவிவர் அநுவதிக்கவும் தகாதபடி யெழுதுகிறார். கத்தியோங்கிய கை கனத்தால் என்பது செவிபுதைக்கவேண்டும் வார்த்தை; கத்தியோங்குவதோ கைகனப்பதோ அம்மா! என்றழைப்பதோ எதுவுங்கிடையாது. இந்த த்ருஷ்டாந்தத்திற்கும் ஸ்ரீபாஷ்யமென்று பிறர் நிர்தேசிப்பதற்கும் என்ன ஸம்பந்தம்? ஒருவர் 'திருவண்ணாமலை வழியாகத் திருக்கோவலூர் போனேன்' னென்றால் இரண்டிடத்திலும் அவர்க்குத் துல்யமான பிரதிபத்தியென்று சொல்லிவிட முடியுமோ? ஒருசைவர் 'ஸ்ரீரங்கம் வழியாக ஜம்புகேச்வரம் சென்றேன்' னென்றால் அரங்கத்தை ஸ்ரீரங்கமென்றபடியாலும் அப்படி ஸ்ரீ ஜம்புகேச்வரமென்று சொல்லாதபடியாலும் அவர்க்கு ஸ்ரீரங்கத்தில்தான் ப்ரதிபத்தி அதிகம், ஜம்புகேச்வரத்தில் அநாதரந்தானென்று சொல்லிவிட முடியுமோ? ஸ்ரீபாஷ்யத்தை பாஷ்யமென்றும் பலகால் எழுதிவைத்திருக்கிற தேசிகாதிகளுக்கு அதில் அவமதிப்பென்னத்தான் முடியுமோ? ச்ருதப்ரகாசிகாசாரியர் "ஸ்ரீபாஷ்யம் வ்யவ்ருணோத் யதி ஸ்வயம்" என்று அநாயாஸமாக ச்லோகம் பண்ணலாமாயிருக்கவும் "பாஷ்யஞ்சேத் வ்யவ்ருணோத் ஸ்வயம்" எனறருளிச் செய்திருக்கிறார். இதனால் அவர்க்கு ஸ்ரீபாஷ்யத்தில் கௌரவ புத்தியில்லை யென்று சொல்லிவிடமுடியுமோ? அதிகரண ஸாராவலி 242ல் "பாஷ்யாதிக்ரந்தலேசோபி அவஹிதமநஸாம் ஐதமர்த்த்யம் பஜேத" என்கிறார் தேசிகன். "ஸ்ரீ பாஷ்யபாத்யுக்திலேசோபி" என்றால் பொருந்தாதோ? ஸ்ரீபாஷ்யமென்னாதே பாஷ்யமென்றதனால் என்ன விபத்து விளைந்திட்டதோ? வசநபூஷணமென்னாதே ஸ்ரீ வசநபூஷணமென்று இவர் சொல்லிவிட்டால் அந்த திவ்ய க்ரந்தத்தில் இவர்க்குப் பெருமதிப்பு என்றுயாரேனும் நினைப்பாருளரோ?

இவரைப் பற்றி அதிகம் எழுதவேணுமோ? திஷ்டஹதமுத்கராபிகாதந்யாயம் நினைவுக்கு வருகிறதந்தோ! திருக்கச்சிநம்பி யருளிச்செய்த தேவராஜாஷ்டகத்தை நித்யம் சொல்லிவருகிறவொருவர் "ஸம்ஸாரமருகாந்தாரே துர்வ்யாதிவ்யாக்ர பீஷணே, விஷயக்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதபசாலிநே"என்றேசொல்லிவருவர். ஸ்வாமிந்! சாலிநே என்று சொல்லக்கூடாது, சாலிநி என்று சொல்லீர் என்று யாரேனும் திருத்தினால் 'மூன்று பாதங்களும் ஏகாராந்தமாயிருக்க, நாலாவது பாதம் மட்டும்வேறாயிருந்தால் க்ரமபங்கமப்பா!'என்பராம்; அதுபோல இவரும்தசாவதார ஸ்தோத்ரத்தில் நரஸிம்ஹாவதார ச்லோகத்தை "யத்ப்ராதுர்ப்பவநாத் அவந்த்ய ஜடராத் யாத்ருச்சிகாத்" என்று சொல்லியும் சொல்லுவித்தும் வருகிறாரென்று மதுராந்தக வித்வானொருவர் சொல்லக் கேட்டிருந்த நாம் அதில் நம்பிக்கையற்றிருந்தோம். *ஸம்ப்ரதி ஸந்தேஹநிர்ணயோ ஜாத:* அந்த ச்லோகத்தை இதில் அப்படியே அச்சிடச்செய்து விட்டார். எப்படியே யென்றால் 'அவந்த்ய ஜடராத்' என்றே. இது அச்சுப்பிழை என்று எளிதாகச் சொல்லிவிடலாம். நாமும் இசைவோம். ஏற்கெனவே இவர்க்கிருந்த ப்ரஸித்திக்குச் சேரவா அச்சுப்பிழையும் அமையவேண்டும். தைவமேவ விநிந்த்யதாம்.

# அடியேனுடைய பாக்யபரிபாக விஜ்ஞாபனம் *P. B A.*

பகவத்கீதை ஏழாமத்யாயத்தில் *சதுர்விதா பஜந்தே மாம் ஜநாஸ் ஸுக்ருதிநோர்ஜுந!* என்றுப்போலே ஸ்ரீ அஹோபிலமடத்து மாலோல வித்வத்ஸதஸ்ஸுக்கு வந்தவர்களை நான்கு வகைப்பட்டவர்களாகக் கண்டேன். (1) வித்வான்களாய் ஸ்ரீ அழகியசிங்கர்திருமுன்பே வீற்றிருப்பவர்கள். (2) தாம் தாம் கற்ற சாஸ்த்ரங்களிலும் வேத திவ்யப்ரபந்தாதிகளிலும் பரீக்ஷைகொடுக்க வந்தவர்கள் (3) ஒரு பலனையுங்கணிசியாமல் ஸபாமண்டபத்தில் உட்கார்ந்திருப்பதையே ஸ்வயம் ப்ரயோஜநமாமக் கருதியிருந்தவர்கள். (4) சிஷ்யர்களாயும் தனிகர்களாயும் ஸ்ரீஸ்வாமிக்குக் காணிக்கை ஸமர்ப்பிக்க வந்தவர்கள். ஆக இந்த நான்கு வகுப்பில் சேர்ந்தவர்களில் பத்துநாளும் காஞ்சியிலேயே யிருந்தவர்கள் மிகவும் பரிமிதர்கள. இரண்டொரு நாட்கள், இரண்டொருவேளைகள்மட்டும் இருந்து போனவர்கள் பல நூற்றுக கணக்கில் தேறுவர்கள். மேலே குறித்த நான்கு வகுப்பினர்களிலும் அடியேனுக்கு அபரிசிதர்களான வ்யக்திகள் மிகச் சிலரேயாவர். இருகலை ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸ்மார்த்தமாத்வாகளும் பெரும்பாலும் அடியேனுக்குப் பரிசிதரானவர்களே. பரிசயமில்லாதவர்களான சில பெரியார்களும் பரமகிருபையுடன் அடியேனை யணுகி யோகக்ஷேமங்களை விசாரித்துத் தங்களை அறிமுகப்படுத்திக் கொண்டனர். இவ்விடம் வந்த வித்வான்களிலும் வித்யார்த்திகளிலும் பலர் (முக்கால் பங்கு) அடியேனுடைய குடிலுக்கும்வந்து குசலப்ரச்நம பண்ணிப்போனது பற்றியே இந்த வியாஸத்திற்கு "அடியேனுடைய பாக்ய பரிபாக விஜ்ஞாபனம்" என மகுடமிட்டது. ஸ்ரீமதழகியசிங்கர் தேவப்பெருமாள் ஸன்னிதியில் விசேஷோத்ஸவப் புறப்பாடு தினங்களில் பெரும்பாலும அடியேனைக் கடாக்ஷவீக்ஷணலக்ஷியமாக்கி க்ருபாசனமான ஸ்ரீஸூக்திகளை ஸாதித்தருளினாரென்பதை ஏற்கெனவே ஸ்ரீராமாநுஜன் வெளியிட்டுள்ளது. ஒருநாள் கோபுரவாசலில் சிறிது போது நின்றருளி உரையாடும்போது அருள்வெள்ளம் பெருகி "தேவரீர் சிபார்சு பண்ணுமவர்கட்கெல்லாம் உத்தம ஸன்மானம் செய்யப்போகிறேன்" என்று ஸாதிக்க நேர்ந்தது. அப்போது நூறு ஸ்வாமிகளுக்குமேல் புடைசூழ்ந்திருந்தபடியால அந்த அருள்வாக்கு அன்றிரவே காஞ்சி முழுவதும் பரவினதேயல்லாமல் அடுத்த நாளிலேயே பலவூர்களிலும் பரவிவிட்டது. அதனாலும் பலர் அடியேனை அணுகத் தொடங்கினார்கள். ஸ்ரீ ஸ்வாமி அடியேனுக்களித்த மேன்மையை அடியேன் உபயோகப்படுத்திக் கொள்ளச் சிறிதும் அவகாசமேற்படவில்லை ஏன்? இன்னாரினையாரென்று பாராமல் ஸர்வத்ர ஸமப்ரீதியாகவே கனகவர்ஷம் செய்தருளினபடியால். அந்த ஔதார்யாதிசயத்தை எத்தனை தடவை எவ்வளவு எழுதினாலும் புநருக்தி தோஷதுஷ்டமாகாது.

ஒரு விசேஷம் பரமஸந்தோஷத்துடன் விஜ்ஞாபிக்கிறேன்;—ஸ்ரீமதுபயவே. மதுராந்தகம் வீரராகவாசாரியர் ஸ்வாமி ஐந்தாறுநாள் இவ்விடமெழுந்தருளியிருந்தார். என்னுடன் அடிக்கடி பரமப்ரீதியோடு வார்த்தையாடி வருவதைக் கண்ட சிலர் "அவருக்கும் தேவரீருக்கும் பிரபல விவாதங்கள் இடையறாமல் நடந்துகொண்டிருந்ததே........." என்று ஏதேதோ கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது அருகேயிருந்தவொரு திருக்குடந்தை வித்வான் பரமரஸிகராய் ஸாதித்தார்—